

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 100/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 200/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 200/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 100/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | அறுவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 600/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 600/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 400/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | **வாராந்திர சேவைகள்** | | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589



**தையில் மகமின்று தாரணியீரேற்ற மிந்தத்**
**தையில் மகத்துக்குச் சாற்றுகின்றேன் - துய்யமதி**
**பெற்ற மழிசைப்பிரான் பிறந்த நாளென்று**
**நற்றவர்கள் கொண்டாடும் நாள்.**

[பூமியிலுள்ளவர்களே! இன்று தைமாதத்தில் மக நட்சத்திரமாகும். இத் தை மாத மக நட்சத்திரத்தின் ஏற்றம் என்னென்னில் தூய ஞானத்தை எம்பெருமான் இன்னருளாலே மயர்வற மதிநலமருளப்பெற்ற திருமழிசையாழ்வார் பிறந்தநாள். இந் நன்னாளினை நல்ல தவத்தை-ப்ரபத்தியை செய்வோர் புகழ்ந்து சொல்லும் நாளாகும்.]

வாருங்கள்! காணுங்கள்!!

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசன சுற்றுலா



திருப்பதி மற்றும் அதனைச்சுற்றியுள்ள முக்கிய திருக்கோயில்களை மிக எளிதில் பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் தி.தி. தேவஸ்தானம் ஆலய தரிசன சுற்றுலாவை அறிமுகப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி, 10 மணி மற்றும் நண்பகல் 2 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இதற்கென்றே சிறப்பு பேருந்துகள் புறப்படுகின்றன.

### காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில்.
2) ஸ்ரீ ஸ்ரீனிவாசமங்காபுரம் திருக்கோயில்.
3) ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி திருக்கோயில்.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில்.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருக்கோயில்.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில்.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருக்கோயில்.

**பேருந்து கட்டணம் :**

பெரியோர் : ரூ. **20/-** (நபர் ஒருவர்க்கு)

சிறுர் : ரூ. **10/-** (நபர் ஒருவர்க்கு)

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

---

நண்பகல் 2 மணிக்கு புறப்படும் பேருந்தில் மட்டுமே 'வட்டார விஞ்ஞான மையத்'திற்கும் யாத்திரிகர்கள் அழைத்துச் செல்லப்படுவர்.




"வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்"


## பிப்ரவரி - 1998

மலர் 28 | இதழ் 9

தனிப்பிரதி ரூ. 4/- | வருடச்சந்தா 48/-

சிறப்பாசிரியர் :

**திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.**
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

* * *

ஆசிரியர்:

**திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

* * *

துணை ஆசிரியர்:

**திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,**

* * *

அச்சிடுபவர்:

**திரு. எம். லக்ஷ்மண் ராவ்,**
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

* * *

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294


உள்ளுறை





அட்டைப்பட விளக்கம் :

முன் அட்டை : தேவாரம் பாடிய தேவன், சித்திரம்: ஜெகதீஷ்

பின் அட்டை : அரசவல்லி சூரியநாராயணன் (ஆந்திர மாநிலம்).

## உங்களுடன்....

காலங்கள் மாறலாம், கடமைகள் மாறுவதில்லை. செயல்கள் மாறலாம், சிந்தனைகள் மாறுவதில்லை. உருவங்கள் மாறலாம், உள்ளங்கள் மாறுவதில்லை. உடைகள் மாறலாம் உணர்வுகள் மாறுவதில்லை. என்ன அந்த கடமைகள்! சிந்தனைகள்! உள்ளங்கள்! உணர்வுகள்! என்று எண்ணத்தோன்றும். கடமைகளாவன எம்பெருமானுக்கு தொண்டு செய்து அவனடிப் பணிவதைக் குறிக்கும். சிந்தனைகளாவன மனம் படைத்த பயனுக்காக அவனுடைய திருநாமங்களைச் சிந்தித்துக்கொண்டே இருத்தலைக் குறிக்கும். உள்ளங்களாவன ஆத்மாக்களைக் குறிக்கும். ஆத்மாவானது அனைத்துயிர்களுக்கும் ஒன்றேதான். உணர்வுகளாவன உயிருள்ளவரையிலும் அதாவது பித்தம், வாதம் போல்வன நோய்கள் நம்மிடம் வந்தடைவதற்கு முன்பே எம்பெருமானுடைய திருநாமங்களை வாயாரச் சொல்லி நல்ல உணர்வுகளை நம்மிடையே வளர்த்துக் கொள்வதைக் குறிக்கும். இது குறித்தே வராஹ சரமச்லோகம் "ஸ்திதே மநசி ஸுஸ்வஸ்தே சரீரே ஸதி யோ நர: । தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விச்வரூபஞ்ச மாமஜம் ॥ ததஸ்தம் ம்ரிய மாணம் து காஷ்டபாஷாணஸந்நிபம் । அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் ॥" என்று கூறுகிறது. அதாவது "மனம் நிலையாக நிற்கையில், உடம்பு நோயற்று நல்ல முறையில் வாதம், பித்தம் , ச்லேஷ்மம் என்னும் மூன்று தாதுக்களும் ஓரளவாயிருக்கையில் எந்த மனிதன் - உலகை உடம்பாகக் கொண்ட பிறப்பு இல்லாத என்னை நினைக்கின்றனோ, பிற்காலத்தில் கட்டையோடும் கல்லோடும் ஒத்தவனாய், மரணமடையும் தருவாயில் அந்த என் பக்தனை நானே நினைக்கிறேன். உயர்ந்த பதவிக்கு அழைத்துச் செல்கிறேன்" என்று கூறப்பட்டுள்ளதை நாம் உணரவேண்டும்.

இதுபோல உணர்வுகள் உடைய உத்தமர்கள் உலகில் உய்ந்து போனவர்கள் ஒருசிலரே. அவ்வகையில் பார்க்கும் பொழுது காலத்தால் முற்பட்டவர்களான ஆழ்வார்களையும், ஆச்சார்யர்களையும், நாயன்மார்கள் மற்றும் மெய்யடியார் களையும் குறிப்பிடலாம். பன்னிரு ஆழ்வார்களில் பக்தி ஸாரரான திரு மழிசையாழ்வார் "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது" என்று பாடி பரவசம் கொண்டுள்ளார். ஆழ் வார்களுக்கெல்லாம் அவயவியான நம்மாழ்வார் "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் எம்பெருமானென்னறென்றே......" என்று கண்களில் நீர்மல்கி கசிந்துருகி காலத்தைக் கழித்திருக்கின்றூர் என்றல் அவர்கழித்த காலம் பொற்காலமாகும்.

இப்படித் தீவிரமான பக்தியை இளைஞர்களும், இல்லறத்தில் இருப்ப வர்களும் கடைபிடிப்பது கடினமானாலும் திருநாமசங்கீர்த்தனம் அதாவது இறைநாமத்தை உச்சரிப்பதில் எவ்வித கடினமும் இல்லையன்றே? அப்படி எனில் காலையில் எழுந்தவுடன் ஹரி ஹரி என்று ஆறுமுறை சொன்னால் என்ன? நலம்தானே! நாம் எழுவது முதல் மீண்டும் படுக்கப்போகும் வரையி லான எழும் பிரச்சனைகளுக்கும் போராட்டங்களுக்கும் நல்லதீர்வு காண நமக்கு அத்திருநாமங்கள் உதவிடுமன்றே?

அத்திருநாமங்களுடன் காலைப்பொழுதில் 'சூரிய வழிபாடும்' செய்வது சாலச்சிறந்தது. அகத்திய முனிவர் ஸ்ரீராமனுக்கு ஆதித்ய - சூரிய வழி பாட்டினைப் பற்றி "ஆதித்ய ஹ்ருதயத்தில்" அருளிச்செய்துள்ளார் அல்லவா!

காலை எழுந்தவுடனே கண்ணுக்கு காட்சியளிக்கும் 'கர்ம சாக்ஷி'யாக சூரியன் விளங்குகிறான் என்றால் அதுமிகையாகாது. கடவுளர்களின் கண் எனவும், அனைத்தையும் பார்ப்பதால் முழு உலகின் ஒற்றர் எனவும், மனிதர்களின் நல்வினை தீவனைகளுக்குச் சாட்சியாக விளங்குபவர் எனவும், அவர்களை உறக்கத்தினின்று எழுப்பிச் செயலில் ஈடுபடச்செய்பவர் எனவும், இயங்குகின்ற, இயக்கமற்ற அனைத்திற்கும் உயிர் எனவும், மேலோங்கிய ஒளிக்கடவுள் எனவும் சூரியன் வேதங்களில் விவரிக்கப்படுகின்றான்.

விஷ்ணு வழிபாடு சூரிய வழிபாட்டிலிருந்தே தோன்றியது எனக் கூறப்படுகிறது. ஆதித்யன் என்ற பெயருக்கு விசாலமான இருதயத்துள் உதிப்பவன் என்று பொருளாகும். கீதையில் கண்ணன் "ஜ்யோதீஷாம் ரவி: அம்ஸுமான்" என்கிறார். அதாவது ஜ்யோதிகளில் - ஒளிகளில் நான் சூரியனாக இருக்கிறேன் என்கிறார். "ரிக்பி: பூர்வஹ்னே திவிதேவ ஈயதே யஜுர்வேத திஷ்டதி மத்யே அஹ்ன: । சாமவேதான தமயே மஹீயதே வேதைஹி அஸுன்ய: திருபிரேதி ஸூர்ய: ॥" உதயகாலத்தில் ருக்வேத ஸ்வரூபியாகவும், நடுவேளை உச்சிவேளையில் யஜுர்வேத ஸ்வரூபியாகவும் மாலையில் அஸ்தமன வேளையில் சாமவேத ஸ்வரூபியாகவும் சூரியன் விளங்குகிறான். அவனே காயத்ரீயின் பொருள் என்று வர்ணிக்கப்பட்டுள்ளது.

சூரியனே உலகைப் படைத்தவன். அவனே அக்னிக்கும் சந்திரன் முதலிய கிரகங்களுக்கும் ஒளியைத் தருகிறான். இதுபற்றியே ஆண்டாள் தாம் இயற்றிய திருப்பாவையில் "கதிர்மதியம் போல் முகத்தான்" என்று நாராயணனை நயம் பட உரைக்கின்றாள். இங்கு வ்யாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை "பராக்கிரமத்திற்கும் குளிர்ச்சிக்கும் ஆதித்யனுடைய புகரை ஊட்டின சந்திரனைப்போலே ஆனது நாராயணனுடைய திருமுகம்" என்று விளக்கியிருப்பதை நாம் அறியற்பாலதாகும்.

உலகத்திற்கெல்லாம் இருளைப் போக்கி நல்வெளிச்சத்தை நல்கும் சூரியனுக்கு "மித்ரன்" என்ற ஒரு பெயர் உண்டு ஏன் அப்பெயர் வரவேண்டும்? ஆம். அவன் எல்லோருக்கும் எல்லாவகையான நன்மைகளைச் செய்வதால் அப்பெயர்வந்தது. அதோடுமட்டுமின்றி அவனுக்கு 'ஆத்மகாரகன்', 'ரக்ஷகன்' என்றெல்லாம் பெயர்கள் உண்டு. அவன் இல்லையேல் உலக வாழ்வு ஏது? சகல போக பாக்கியங்களையும் அதிர்ஷ்டத்தையும் அள்ளித்தருபவன் அவன் அன்றோ? அதனால்தான் உள்ளங்கையில் சூரியமேட்டிலுள்ள ரேகையை அதிர்ஷ்டரேகை என்கிறார்கள். வெற்றியின் சின்னமாகக் கருதும் 10 என்ற எண்ணில் - மகராசி 10ம் வீட்டில் தைமாதம் சுக்லபக்ஷ சப்தமி அன்று - ரதசப்தமி அன்று சூரியனை வழிபடுகிறோம்.

சூரியன் ஏழு நிறங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு ஏழுவிதமான சக்திகளையும் இயக்கங்களையும் நடத்துகின்றான். அச்சூரியனே பன்னிரண்டு மாதங்களில் பன்னிரண்டு ஆதித்யர்களாக தேரில் வலம் வருகின்றான். அவன் தான் பங்குனி மாதத்தில் விஷ்ணுவாக வருகின்றான். அவனே சூரிய நாராயணன், அவன்தான் பரமாத்மா. அவனை இந்த சூரிய ஜெயந்தியான ரதசப்தமி அன்று என்றும்போல் வணங்கி வழிபட்டு அவனுடைய தாயன்பான இன்னருளுக்கு அடிமையாகுவோமாக.



# செய்திச்சுருக்கம்

## ஸ்ரீபத்மாவதி தாயார் பிரம்மோத்ஸவம்

திருமலையப்பனின் திருமார்பில் தங்கி இருப்பவள் ஸ்ரீபத்மாவதி தாயார் எனும் அலர்மேல் மங்கை. இப்பூமகள் அர்ச்சை வடிவில் வீற்றிருந்து கோடிக்கணக்கான பக்தர்களுக்கு அருள் பாலிக்கும் திருத்தலமே திருச்சானூராகும். சுமார் ஐந்தாயிரம் ஆண்டுகளுக்கு முனபாக திருமகளான ஸ்ரீமகாலக்ஷ்மி திருவேங்கடவனை வந்தடைவதற்காக திருச்சானூரில் புனிதமான தாமரைத்தடாகத்தில் (பத்மசரோவரம்) தங்கத்தாமரையில் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷம் பஞ்சமி திதியில் உத்தராடம் நட்சத்திரம் கூடின நன்னாளில் அவதரித்தாள். அன்றுதொட்டு இன்று வரையும் அந்நாளை கொண்டாடும் பொருட்டு பஞ்சமிதிதிக்கு 10 நாட்களுக்கு முன்னாளிலிருந்து கார்த்திகை பிரம்மோத்ஸவம் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இந்த ஆண்டும் 25-11-97 முதல் 4-12-97 வரை பத்து நாட்கள் ஸ்ரீ பத்மாவதி தாயாருக்கு வருடாந்திர கார்த்திகை பிரம்மோத்ஸவம் சிறந்த வைபவமாக கொண்டாடப்பட்டது.

## அங்குரார்ப்பணம்

25-11-97 செவ்வாய்க்கிழமை இரவு 7-00 மணியளவில் ஸ்ரீசுதர்ஸன பகவான் முன்னிலையில் அங்குரார்ப்பணம் சம்பிரதாய முறைப்படியும் பாஞ்சராத்தர ஆகம முறைப்படியும் வெகு வைபவமாக நடந்தது.

## துவஜாரோஹணம்

26-11-97 புதன்கிழமை காலை 7-15 மணிக்கு ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில் தங்க துவஜஸ்தம்பத்தின் மேல் வேத மந்திரங்கள் ஓத மங்கள வாத்தியங்கள் முழங்க கஜதுவஜம் (யானைக்கொடி) ஏற்றப்பட்டு பிரம்மோத்ஸவம் தொடங்கப்பட்டது. இந்த துவஜாரோஹணம் நிகழ்ச்சி திரு. சக்ரபாணி பட்டாசார்யலு முன்னிலையில் நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் தேவஸ்தான ஆஸ்தான பண்டிதர் திரு. மாடம்பாக்கம் ஸ்ரீனிவாச பட்டாச்சார்யலு, தேவஸ்தானப்



பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. மகாதேவநாயுடு, துணைச்செயலாட்சித் தலைவர் திரு. லக்ஷ்மிபதி, தலமைப்பொறியாளர் திரு. பி. முனிரெட்டி, மக்கள்தொடர்பு அலுவலர் திரு. சுபாஷ்கௌட் மற்றும் தேவஸ்தான உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

அதன்பின்னர் அன்றிரவு 8 மணி முதல் 9-30 மணி வரை, திருச்சானூர் மாடவீதிகளில் ஸ்ரீபத்மாவதி தாயார் சிறிய சேஷவாகனத்தில் திருவீதி வலம் வந்து பக்தர்களுக்கு அருள்பாலித்தார்.

மறுநாள் 27-11-97 அன்று காலை 8 மணிக்கு ஸ்ரீபத்மாவதி தாயார் பெரிய சேஷவாகனத்தில் ஸ்ரீமகாலக்ஷ்மியாகவும் அன்றிரவு அம்சவாகனத்தில் கலைமகளாகவும், (ஸரஸ்வதி) 28-11-97 அன்று முத்துப்பந்தல் வாகனத்தில் ஸ்ரீ கிருஷ்ண அவதாரமாகவும், அன்றிரவு சிம்ம வாகனத்தில் சக்தியாகவும், 29-11-97 அன்று காலை கல்ப விருக்ஷ வாகனத்தில் வரம்தரும் லக்ஷ்மியாகவும், அன்றிரவு அனுமன் வாகனத்தில் த்ரேதாயுக வேதவதியாகவும், 30-11-97 அன்று காலை பல்லக்கில் 'தனலக்ஷ்மியாகவும்' அன்றிரவு தங்க யானை வாகனத்தில் 'கஜலக்ஷ்மீ'யாகவும் தரிசனம் தந்தார்.

## யானை வாகனம்

ஸ்ரீபத்மாவதி தாயார் 30-11-97 ஞாயிறன்று இரவு 8 மணியளவில் தங்க யானையின் மேல் 'கஜலக்ஷ்மி'யாக திருச்சானூர் கோயில், புஷ்கரணியைச் சுற்றிக் கொண்டு திருவீதி வல



மாக பவனி வந்தார். ஆயிரமாயிரம் பக்தக் கோடிகளின் இன்னருளுக்கு பாத்திரமானார். இவ் அரிய உத்ஸவத்தில் தி.தி. தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், இணைச் செயலாட்சித் தலைவர் திரு. ராமகிருஷ்ணு அவர்கள், அறநிலையத்துறை ஆணையர் திரு. செங்கப்பா, துணைச் செயலாட்சித் தலைவர் திரு. கிருஷ்ணுரெட்டி, திருக்கோயில் பேஸ்கார் திரு. கிரிஜா பிரசாத், மக்கள் தொடர்பு அலுவலர் திரு. சுபாஷ் கௌட் மற்றும் உயர் அலுவலர்களும் அலுவலரல்லாதவர்களும் கலந்துகொண்டனர்.

1-12-97 அன்று காலை சர்வ பூபால வாகனத்திலும், அன்றிரவு கருட வாகனத்திலும், 2-12-97 அன்று காலை சூர்ய பிரபை வாகனத்திலும் அன்றிரவு சந்திரபிரபை வாகனத்திலும் திருவீதி வலம் வந்து திருக்காட்சியினை அளித்தார்.

## திருத்தேர்

3-12-97 அன்று காலை 7 மணியளவில் ஸ்ரீ பத்மாவதி தாயார் திருத்தேர் திருவிழா கோலாகலமாக கொண்டாடப்பட்டது. ஆயிரமாயிரம் பக்த கோடிகளின் கோவிந்தநாம கோஷத்தின் இடையில் மிகவும் சிறப்பாக நடந்தது. சுமார் மூன்று மணி காலம் கொண்டாடப்பட்ட இவ்விழாவில் தேவஸ்தானப் பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் திரு. ராமச்சந்திர ராஜு அவர்கள், செயலாட்சித்தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் மற்றும் இதர உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர்.



## பஞ்சமி தீர்த்தம்

ஸ்ரீ பத்மாவதி தாயாரின் கார்த்திகை பிரம்மோத்ஸவத்திலே சிறந்த வைபவமாக நடந்த உத்ஸவம் பஞ்சமீ தீர்த்தம். இந்நாளில் நடந்த சக்ரஸ்நானத்திற்கு முன்பாக சம்ப்பிரதாய முறைப்படி சாமர பரிவட்டங்களுடன் வேதமந்திரங்களின் முழக்கத்தோடு திருமலை திருவேங்கடவனிடமிருந்து மஞ்சள் குங்குமம், பட்டுப்புடவை, இரவிக்கை, பூமாலைகள், பிரசாதங்கள் திருச்சானூர் திருக்கோயிலுக்கு கொண்டுவரப்பட்டன. அதன்பின்னர் தாயாரின் பத்ம சரோவரம் முன்பு தாயாருக்கு சுதரஸன ஆழ்வாருடன் ஸ்நபன திருமஞ்சனம் வைபவமாக நடந்தது. பின்னர் சுப முகூர்த்தத்தில் புஷ்கரணியில் சுதர்ஸன ஆழ்வாரை மூழ்கி புனித நீராட்டம் செய்தனர். இதுபோது ஆயிரமாயிரம் பக்தர்கள் பத்ம சரோவரத்தில் புனிதநீராடினர்.

இந்த பஞ்சமி தீர்த்த உத்ஸவத்தில் தி.தி. செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக் அவர்கள் மற்றும் அவருடைய துணைவியாரும் இணைச்செயலாட்சித்தலைவர் திரு. பாலசுப்ரமண்யம் அவர்கள் மற்றும் அவருடைய துணைவியாரும் (திருமலை), இணைச்செயலாட்சித்தலைவர் திரு. ராமகிருஷ்ணு அவர்கள் மற்றும் அவருடைய துணைவியாரும் (திருப்பதி), துணைச்செய





லாட்சித் தலைவர் திரு. லக்ஷ்மிபதி, மற்றும் உயர் அலுவலர்களும் கலந்துகொண்டனர்.

இந்த பிரம்மோத்ஸவத்தை முன்னிட்டு திருச்சானூர் தோழப்ப தோட்டத்தில் பத்துநாள் தேவஸ்தான தர்மபிரசார பரிசஷத் சார்பாக சங்கீத கச்சேரிகளும், ஹரிகதைகளும் அறநிலைச் சொற்பொழிவுகளும், இனிதே நடந்தது.

## முனைவர் பட்டம்



தி.தி. தேவஸ்தான 'ஸப்தகிரி' அலுவலகத்தில் புத்தக வெளியீட்டுத்துறையில் துணை ஆசிரியராகப் பணிபுரியும் திரு. கோடபாடி ராதா ரமணு அவர்களுக்கு அண்மையில் திருவேங்கடவன பல்கலைக்கழகம் முனைவர்' பட்டம் அளித்துள்ளது. இவருக்கு தெலுங்குத் துறையில் "ஸ்ரீலக்ஷ்மிந்ருஸிம்ம சதகாலபரிசீலனா" எனும் தலைப்பில் செய்த ஆய்வேட்டிற்காக முனைவர் பட்டம் அளிக்கப்பட்டது.



சென்னையிலிருந்து வெளிவருகின்ற பிரபல ஆங்கில மாத இதழ் "விஸ்டம்" ஆண்டுதோறும் பல துறைகளில் சிறப்பானவர்களுக்கு "விஸ்டம் அவார்ட்" என்ற விருதினை வழங்கி கௌரவிக்கின்றது. இவ்வாண்டு அப்பத்திரிகையின் வெள்ளி விழா ஆண்டு. இதை சர்வதேச விழாவாக கொண்டாடுகிறார்கள். இவ்வாண்டு 'ஸப்தகிரி' மாத இதழுக்கு அவ்வப்பொழுது புகைப்படங்களையும் கட்டுரைகளையும் அனுப்பிவந்துள்ள மயிலாடுதுறையைச் சார்ந்த போட்டோ என். ராமகிருஷ்ணு அவர்களுக்கு பொன்விழா கண்ட சிறந்த "போட்டோ ஜர்னலிஸ்ட்" என்ற விருதினை வழங்கியுள்ளார்கள்.

## கலாரத்னா விருது



அண்மையில் காளஹஸ்தியில் "ஸ்ரீராம நாமமித்ர மண்டலி"யினர் நடத்திய விருது வழங்கும் விழாவின் போது தி.தி. தேவஸ்தான 'ஸப்தகிரி' பத்திரிகையில் ஓவியக்கலைஞராக பணிபுரியும் திரு. ஜி. சந்திரசேகர் அவர்களுக்கு 'கலாரத்னா' விருது வழங்கப்பட்டது. இவ்விழாவில் திரு. டாக்டர். மேடசானி மோகன் தலைமையாளராக பங்கு கொண்டார்.

## பொறுப்பாண்மைக்குழுவின் முடிவுகள்

30-11-97 மற்றும் 1-12-97 அன்று திருமலையில் நடந்த தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுவின் கூட்டத்தில் கையாளப்பட்ட முடிவுகளை குழுத்தலைவர் திரு. கலிதிண்டி ராமச்சந்திரராஜு அவர்களும் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர் விநாயக் அவர்களும் பத்திரிகை நிருபர்களுக்கு பேட்டி அளிக்கையில் கீழ்க்கண்டவாறு கூறினர்.

* தாள்ளபாக்க அன்னமய்யாரின் சங்கீர்த்தனங்களின் அனைத்து தொகுதிகளையும் சுமார் 11.53 இலட்சம் ரூபாய் செலவில் மீண்டும் மறுபதிப்பு செய்யப்படும்.
* அமரர் சாது சுப்ரமணிய சாஸ்த்ரி அவர்கள் இயற்றிய திருமலை திருப்பதி திருக்கோயில் வரலாற்றினை தெரியப்படுத்தும் சாஸனங்களின் தொகுதிகள் எட்டினையும் மற்றும் "திருப்பதி வெங்கடேஸ்வரா" எனும் ஆங்கில மொழி புத்தகத்தை சேர்த்து, ஒன்பது புத்தகத்தினையும் 15 இலட்சம் ரூபாய் செலவில் மறுபதிப்பு செய்யப்படும்.
* கிருஷ்ணு மாவட்டம் கைகளூரில், ரங்காரெட்டி மாவட்டம் பரிகிலோ தேவஸ்தானத்தாரின் கல்யாண மண்டபம் கட்டுவதற்கு முடிவு எடுக்கப்பட்டது.
* தினமும் நடக்கும் திருமலை சுவாமி ஆர்ஜித சேவைகளின் கட்டணத்தினை மேலும் 20 ரூபாய்க்கு அதிகப்படுத்தி இலவசமாக இரண்டு சிறிய லட்டுகளை வழங்க முடிவு எடுக்கப்பட்டது.

## இலட்சகுங்குமார்ச்சனை

ஸ்ரீபத்மாவதி தாயார் பிரம்மோத்ஸவத்தை முன்னிட்டு அங்குரார்ப்பண நாளான 25-11-97 அன்று காலை 6 மணியிலிருந்து 1 மணி வரை தாயாருக்கு இலட்ச குங்குமார்ச்சனை வைபவமாக செய்விக்கப்பட்டது. ஆர்ஜித சேவையாக நடத்தப்பட்ட இச்சேவையில் ரூ. 1,116/- கட்டணம் செலுத்தி 30 குடும்பத்தினர் பங்கு கொண்டனர்.



## ஒலிநாடா வெளியீடு

25-11-97 செவ்வாய்கிழமை அன்று காலை தாயார் பிரம்மோத்ஸவத்தை முன்னிட்டு தாயார் திருக்கோயில் தங்க துவஜஸ்தம்பத்தின் அருகில் ஸ்ரீலக்ஷ்மி சஹஸ்ரநாமார்ச்சனை ஒலிநாடா வெளியிடப்பட்டது.

இந்நிகழ்ச்சியில் தேவஸ்தான துணைச்செயலாட்சித் தலைவர் திரு. டி. ராமகிருஷ்ணு அவர்கள் கலந்துகொண்டு இவ் ஒலிநாடாவினை வெளியிட்டார். திருச்சானூர் அர்ச்சகர் திரு. அனந்தாசார்யலு குரலில் தேவஸ்தான ஒலிப்பதிவு திட்டத்துறை இயக்குனர் திரு. காமிசெட்டி ஸ்ரீனிவாசுலு முன்னிலையில் உருவாக்கப்பட்ட இந்த ஒலிநாடாவினை திரு. ஏவி.எம். குமரன் வழங்கினார்.





# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித மனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருபப்தி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்
நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்
நன்கொடை : ரூ. 15,000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)
நன்கொடை : ரூ. 5,000

இத்திட்டத்தின் கீழ் திருமலை-திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்
நன்கொடை : ரூ. 2,000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

# திருமலை எம்பிரானிடம் திருமழிசைப்பிரானின் ஈடுபாடு

டாக்டர் கோ.க.அ. ரங்கராஜன் - திருப்பதி.

முதலாழ்வார்களான பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் ஸ்ரீமந் நாராயணனின் நிர்ஹேதுக கடாக்ஷத்தின் பெருமையால் பெற்ற பக்திப் பெருங்காதலின் மூலமாக அவனை முற்றும் கண்டு அநுபவித்து, அவ்வநுபவத்தின் முதிர்ச்சியினால் நடைவிளங்கு தமிழ்மாலைகளாலே ஸ்ரீமந் நாராயணனே பரதெய்வமென்று மூன்று திருவந்தாதிகளால் பறைசாற்றியருளினர். அவர்களுக்கு அடுத்தவரான திருமழிசைப்பிரானும் எம்பெருமானாலே மயர்வற மதிநலமருளப்பெற்றவர். மணவாள மாமுனிகள், 'பொய்கையார், பூதத்தார் பேயார் புகழ் மழிசை ஐயன்' என்று ஆழ்வார்களின் வரிசைக் கிரமத்தையருளிச்செய்கிறார்.

'ந தத்ஸ்தி விநாயத் ஸ்யாத் மயா பூதம் சராசரம்' (கீதை) (அசையும் பொருள், அசையாப் பொருள் எதுவும் என்னைப் பிரிந்தால் இல்லை) என்று தன்னைக் காட்டிக் கொடுத்த உபகாரகனான எம்பெருமான் திருமலையில் எழுந்தருளி நம்மை உய்விக்கிறான். 'நாராயணன் ஒருவனே அநுபவிக்கத்தக்கவன்' என்னும் முதலாழ்வார்களின் கருத்தைத் திருமழிசைப் பிரானும் பின்பற்றி, அக்கருத்துக்களுக்குக் களையறுத்து நம்மை உய்விக்கிறார். அதாவது நாராயணன் திறத்து பக்தி செய்தலே உத்தமமாகும். அவனே பரதத்துவம் என்று காட்டிக் கொடுத்த உபகாரகர் திருமழிசைப்பிரான் என்பதாகும். ஆக 'பிரான்' என்னும் சொல்லால் உபகாரகன் பொருளை அறிகிறோம். 'நானே பரதெய்வம்' என்னும் இதர தேவதைகளுக்கு வாளைப்போன்றவர் ஆதலில் 'வாளை உறையிலிடாதவர்' என்ற பெயர் திருமழிசைப்பிரானுக்கு வழங்கலாயிற்று. இப்படிப்பட்ட ஆழ்வார் திருமலை எம்பிரானிடம் கொண்ட ஈடுபாட்டினை இங்குக் காண்போம்.

திருமழிசைப்பிரான் தாம் அருளிய நான்முகன் திருவந்தாதி



யில் 39-ஆம் பாசுரம் முதல் 48-ஆம் பாசுரம் வரை திருவேங்கடமுடையானை அநுபவிக்கிறார்.

தம்முடைய போதுபோக்கு நல்லதாக இருக்கப்பெற்று திருவேங்கடவனை ஸேவித்துத் திருமலையில் நித்யவாஸம் செய்ய வேண்டும்; இதுவே தம்முடைய ஆசை எனவும் இதனைத் தலைக்கட்டித் தரவேண்டும் என்றும் அவனை அழைக்கிறார், 'அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண' என்னும் பாசுரத்தால் ஆழ்வார். இதில் திருமலையின் இயற்கை வளத்தைப் பற்றிப் பேசி அப்படிப்பட்ட திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருமலையப்பனைத் தான் தரிசிக்கவேணும் என்கிறார். அதாவது மழைக்காலத்தில் பெரிய அருவிகளானவை ரத்தினங்களைத் திரட்டிக் கொண்டு விழ அவற்றின் ஒளியைப் பார்த்து அவை நெருப்பின் பிழம்பு என மயங்கி யானைகளானவை பயந்து நிற்கின்றனவாம். மலைப்பாம்புகளானவை அந்த ரத்தினங்களை மின்னல் என மயங்கிப் புற்றிலே ஒளிந்து கொள்கின்றனவாம். அப்படிப்பட்ட திருமலையில் எழுந்தருளியுள்ள எம்பிரானை 'அழைப்பன்' என்கிறார் என்பதாம். 'கோவிந்தற்க்கோர் குற்றேவல் இம்மைப் பிறவி செய்யாதே இனிப்

போய்ச் செய்யும் தவந்தான் என்?' என்னுமாபோலே இவ்வி டத்தில் இப்போதே அவனைக் காண வேணுமென்ற ஆசை யையுடையவராக ஆழ்வார் காணப்படுகிறுர்.

இப்பாட்டில் திருமழிசையாழ் வார் நாயகீ பாவத்தில் 'இழைப் பன் திருக்கூடல்கூட' என்று கூடலிழைக்கிறுர். கூடலிழைத் தலாவது நல்நிமித்தம் பார்ப் பதாகும். இரட்டை எண் ணில் முடிவு வருமாகில் எம்பெ ருமான் தன்னுடன் கூடுவான் என்றும், ஒற்றை எண்ணில் முடிவு வருமாகில் அவன் கூட மாட்டான் என்றும் அறிவதற் காகக் குறிபார்ப்பதே கூடலி ழைத்தலாகும். கூடலிழைப் பது பெண்டிர்க்கே உரித்ததா கையால் இங்கு 'இழைப்பன் திருக்கூடல்' என்று ஆழ்வார் அருளிச்செய்தது நாயகீ பாவத் தில் தான் என்பது அழகிய மணவாளச் சீயர் என்னும் ஆசா ரீயரின் கருத்தாகும்.

அடுத்ததாக, தாம் செய்த காரி யம் சிறியது; ஆனால் எம் பெருமானால் பெற்ற பயனோ மிகப்பெரியது என்று ஆழ்வார் வியந்து உளம் மகிழ்கிறுர்

"வெற்பென்று வேங்கடம்
பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று
நினைக்கின்றேன்........."

என்கிற பாசுரத்தில். அதாவது கொல்லிமலை, குருவிமலை, இம யமலை என்று மலைக ளின் பெயர்களை வரிசையாகச் சொல்லியமாத்திரத்தில், 'வேங்க டமலை' என்றதாகவும் அதையே அவன் திருவேங்கடத்தைப் பாடி யதாகக் கணக்கிட்டு வைத்துள் ளான் என்றதாகவும் ஆழ்வார கூறுகிறுர் எனபதாம்.

'யந்ந தேவா ந முநய:' என் னும் ஸ்ரீவிஷ்ணு புராண ச்லோ கத்திலும், 'அத்யர்க்காநல தீப் தம்' என்னும் பாரத ச்லோகத் தாலும் பரமபதத்தின் பெருமை சொல்லப்படுகிறது. அதா வது விஷ்ணுவினுடைய பரமப தத்தைத் தேவர்களும் முனிவர் களும் தானும் (பிரமன்) சிவனும் அறிய மாட்டார்களாம். விஷ்ணு விடைய இருப்பிடமானது சூரி யனையும் அக்னியையும் விஞ் சிய ஒளியுடையதாக உள்ளதாம். இப்படிப்பட்ட பெருமை வாய்ந் தவன் தன்னுடைய நீர்மை எனும் குணத்தைக் காட்டித் தம்மை (ஆழ்வார்) அவனுக்காக ஆக்கிக் கொண்டான் என்கிறுர். இவ்விடத்தில் 'என் பேரைச் சொன்னாய்; என் ஊரைச் சொன்னாய்; என் அடியார்கள் ஒதுங்க நிழல் கொடுத்தாய்' என்னும் ஆசாரியரின் வாசகம் நினைத்தற்குரியது.

மேலும் 'சஞ்சலம் ஹி மந:' (கீதை) என்றும் 'நின்றவா நில்லா நெஞ்சினையுடையேன் என்செய்கேன்' என்றும் ஓரிடத் தில் நில்லாததாகச் சொல்லப் படுகிற தம் நெஞ்சை நிற்க் வைத்து, இப்படிப்பட்ட க்ரு பைக்குக் காரணத்தை ஆராய் வதாகக் கூறுகிறுர். புருஷகார பூதையான பிராட்டியே இக்கரு ணைக்குக் காரணம் என்பதை அறிந்து அந்தத் திவ்ய தம்பதி களின் திருவடிகளாகிய வலை யிலகப்பட்டு 'அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்னின் னருள் கொடுக்கும்' என்பதற்கி ணங்க அவர்களுக்குக் கைங்கர் யம் செய்து நற்கதியைப் பெற் றதாகச் சொல்லி அநுபவிக்கி றுர் திருமழிசைப்பிரான்.

இருவரின் திருவடி பலத் தாலே திருவேங்கடவனைக் காண ஆசைகொண்டு அவ னுடைய திருவோணத்திருவிழா வில் கலந்துகொண்டு அவனை அநுபவிக்க விருப்பம் கொண் டுள்ளதாகக் கூறுகிறுர்.

'காண லுறுகின்றேன்
கல்லருவி முத்துதிர
ஓண விழவி லொலியதிர-பேணி
வருவேங்கடவா என்னுள்ளம்
புகுந்தாய்
திருவேங்கட மதனைச் சென்று'

என்னும் பாசுரத்தில் ஆழ் வார் திருவேங்கடமுடையானை அநுபவிக்குமாறு தம்நெஞ்சிற்கு உபதேசம் செய்யும்போதே திரு வேங்கடவனும் தனக்கு முன் பாக தம்நெஞ்சில் வந்து தோன் றிக் காட்சி அளிக்கிரு னாம். இதனால் தம்முடைய பாரிப்புக்கு ஊறு விளைந்ததா கவும் திருவேங்கடவனை நோக் கிக் கூறுகிறுர்.

'வாரிக்கொண்டு உன்னை
விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்ற வென்னையொழிய
என்னில் முன்னம்
பாரித்துத் தானென்னை
முற்றப் பருகினான்'
(திருவாய் 9-6-10)

என்று நம்மாழ்வாரும் தம்மு டைய பாரிப்பைவிட திருக்காட் கரையப்பனின் பாரிப்பு மிஞ் சியதாகக் கூறுகிறுர். இதில் 'என்னில் முன்னம் பாரித்து' என்றவிடத்து பெரியவாச்சான் பிள்ளை 'நான் பாரித்தவளவு மன்றிக்கே நான் பாரித்த காலத்துக்குமுன்பே பாரித்து, ஆசார்ய விஷயீகாரத்துக்குப் பின்பிறே இவருடைய பாரிப்பு; ஸம்பந்தத்துக்குத் திரஸ்கார ஹேதுவில்லாமையாலே, அவ னுடைய பாரிப்பு ஸத்தா ப்ர யுக்தமிறே' என்கிறுர். அதாவது ஆழ்வார் பாரிப்பதற்குமுன்பே

எம்பெருமான் அவருடைய விஷயத்தில் இங்ஙனே பாரித்திருந்து தன்னுடைய மனோரதமே தலைக்கட்டப்பெற்ருன் என்பதாம். இதனால் ஸ்வகத ஸ்வீகாரத்திலுங்காட்டில் பரகத ஸ்வீகாரமே வலிதென்றும் அதுதான் முற்பட்டதாயிருந்து கார்யகரமாகின்றதென்றும் காஞ்சிஸ்வாமி விரித்துப் பொருள் கூறுகின்ருர்.

திருவோணத்திருவிழாவில் திருப்பல்லாண்டு பாடுவார், வேதமோதுவார், பாடுவார் ஆடுவார்களுமாகிற ஒலியானது கடலிரைத்தாற்போலே கண்டவிடமெங்கும் முழங்குகிற செல்வத்தையுடைய திருவேங்கடமுடையான், தம்மை (ஆழ்வார்) ஆசைப்படுத்த தேடி வந்து தம்முடைய மனத்தில் புகுந்து கொண்டு தான் அநுபவிக்கும் தன்மையைக் காஞ்சிஸ்வாமி தம் விரிவுரையில் கீழ்க் கண்டவாறு அநுபவிக்கிருர்.

"இப்படிப்பட்ட (எப்போதும் பேரொலி செய்துகொண்டு வீழ்கின்ற அருவிகளிலே முத்துக்கள் உதிரப்பெற்றதும், திருவோணத்திருவிழாவில் மங்களாசாஸந த்வநிகள் மிகப்பெற்றதுமான) திருமலையிலெழுந்தருளியிருக்கும் பிரானே! நீ அத்திருமலையைவிட்டு என்னுள்ளம் புகுந்தாய்; இனி நீ திருமலையில் இல்லையாயினும் நீ உகந்து வாழ்ந்தவிடம் என்கிற காரணத்தினால் அத்திருமலை தன்னைச் சென்று காணவே நான் விரும்புகின்றேன் என்றவாறு" என்பதாம்.

திருவோணத்திருவிழாவை அநுபவித்த ஆழ்வார் உலகுக்கு உபதேசம் செய்கிருர்,

'சென்று வணங்குமினோ
சேணுயர் வேங்கடத்தை
நின்று வினை கெடுக்கும்
நீர்மையால்-என்றும்
கடிக்கமல நான்முகனும்
கண்மூன்றத்தானும்
அடிக்கமல மிட்டேத்து மங்கு'

என்னும் பாசுரத்தால். அதாவது பயனையே கருத்திற் கொண்டு தாங்கள் பயனைப் பெற்றவாறே 'எழுவார் விடை கொள்வார்' என்பதற்கிணங்க செல்லும் பிரமன், சிவன் முதலியவர்களும் ஆச்ரயிக்கும் திருமலையை அவரவர்கள் வேண்டியவற்றைப் பெறும் நிமித்தமாகவாவது சென்று அடையுங்கள் என்பதாகும்.

இஷ்டப்ராப்திக்கும அநிஷ்ட நிவர்த்திக்குமாகத் திருவேங்கட மலையை அடைந்து திருமலையப்பனை ஸேவிக்கவேண்டுமென்பதில்லை. அருகே சென்று மலையை வணங்கினாலும் போதுமானது; இஷ்டப்ராப்தியும் அநிஷ்ட நிவர்த்தியும் தன்னடையே ஸித்திக்கும் என்பதாம்.

மேலும் 'சென்று வணங்குமினோ' என்னும் தொடரில் 'சென்று' என்னும் பதத்திற்குப் பதிலாக 'நின்று' என்னும் சொல்லை வருவித்துப் பொருள் கூறின் பரபரப்பில்லாமல் நிலையாக நின்று வணங்குங்கள்; தன் இயற்கையான குணத்தால் தன்னை அடைந்தவர்களுடைய அனைத்துப் பாவங்களையும் திருமலை அறுக்கும் என்னும் சுவையான பொருளையும் நாம் அறியலாம். திருவேங்கடயாத்திரை என்று புறப்படும்போதே வழியிலேயே கண்டு அநுபவித்து வாழலாம்படி சிகரங்களின் மிகுந்த ஒக்கத்தையுடைத்தான திருமலையை அடையுமாறு உலகுக்கு உபதேசிக்கிருர் ஆழ்வார் இப்பாட்டில். நம்மாழ்வாரும்,

'குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன்
. . . . . திருவேங்கடமலை
ஒன்றுமே தொழ
நம்வினையோயுமே'

என்கிருர்.

அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த திருமலையை அடைவதோடு நில்லாமல் பிரமன், சிவன் முதலியோர் திருவாராதன காலங்களில் திருவாராதனத்திற்கு வேண்டிய உபகரணங்களான குடை, சாமரங்கள் முதலானவற்ருேடு அந்திப் பொழுதில் வந்து வணங்குகிருர்களாம். அவர்கள் திருவந்திக்காப்பிடுவதைக் கூட நின்று நேரில் கண்டாற்போலே ஆழ்வார அநுபவிக்கிருர், 'மங்குல்தோய் சென்னிவடவேங்கடத்தானை' என்னும் பாசுரத்தில்

'கொண்டு குடங்கால்மேல் வைத்த
குழவியாய்
தண்டவரக்கன்தலை தாளால்-
பண்டெண்ணிப்
போம்குமரன் நிற்கும்
பொழில்வேங்கடமலைக்கே
போங்குமர ருள்ளீர் புரிந்து'

கிழத்தனம் வந்து அடைவதற்குமுன்பே சோலைகள் சூழ்ந்த திருமலையை அடைந்து வணங்குமாறு மேற்படி பாசுரத்தால் ஆழ்வார் நமக்கு உணர்த்துகிருர். ஆழ்வார்க்கு எம்பெருமான் மதிநலமருள, அவனுடைய நிர்ஹேதுக கடாக்ஷம் காரணமாக ஆழ்வார் ஒரு பகவத் கதையை இப்பாட்டில் வெளிப்படுத்துகிருர். அதாவது இராவணன்; கடுந்த

வம் புரிந்து பிரமனை வரம் வேண்டும்போது ஸர்வேச்வரன் ஒரு சிறு குழந்தைவடிவில் பிரமன் மடியில் தூங்குவது போலக்கிடந்து 'இவன் பத்துத் தலைகள் கொண்ட இராவணன்; இவனுக்கு நீ வரமளித்தால் இவன் உலகிற்கு மிகவும் இன்னல்களை விளைவிப்பான்; என்று அறிவிப்பவன் போன்று தன் திருவடிகளாலே இராவணனுடைய பத்துத் தலைகளையும் அவனுக்குத் தெரியாமல் எண்ணிக்காட்டி மறைந்தான் என்பதாம். 'போம் குமரன் நிற்கும்' என்னும் இத்தொடரில் 'குமரன்' என்பதற்கு 'நித்ய யுவாவான எம்பெருமான்' என்று காஞ்சி ஸ்வாமி பொருள் கூறுகிறார். வயது முதிர்ந்த பின்பு தண்டுகாலா ஊன்றியூன்றித் தள்ளி நடக்கும் முதுமையில் திருமலை நெஞ்சாலும் நினைப்பரிதாகையாலே கிளரொளி கெடுவதற்கு முன்பே திருமலைக்குச் செல்லவேண்டுமென்பதைக் 'குமரருள்ளீர்' என்னும் விளியால் அறியலாம் என்கிறார் ஸ்வாமி.

'சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை என்றும்' 'பொழில் வேங்கடமலைக்கே போம்' என்றும் கீழ்ப் பாசுரங்களில் ஸம்ஸாரிகளுக்கு ப்ராப்யத்தைச் சொன்ன ஆழ்வார் 'புரிந்து மலரிட்டு' என்னும் பாசுரத்தில் ஸம்ஸாரிகளுக்கு மட்டும் திருமலை ப்ராப்யமன்று; வானுலகிலுள்ள நித்ய ஸூரிகளுக்கும் திருமலை ப்ராப்யம் என்பதை 'வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு' என்னும் தொடரால் உணர்த்துகிறார். அதாவது 'விஷ்ணோ: பதே பரம மத்வ உத்ஸ:' (விஷ்ணுவினுடைய மேலான திருவடிகளில் மதுதாரைகள் ஒழுகா நிற்கின்றன) என்றும் 'தேனே மலரும் திருப்பாதம்' (திருவாய். 1-5-8) என்றும் சொல்லப் படுகின்ற அவனுடைய திருவடிகளில் விரும்பி மலரோடு நீர், சுடர், தூபம் முதலியன ஸமர்ப்பித்து அவனுடைய நீர்மையை நினைந்து அவனுக்கு இவ்வுலகில் என்ன தீங்கு வருகிறதோ என்று அஞ்சி மங்களாசாஸநம் பண்ணும் ஸம்ஸாரிகளோடு 'ஸதா பச்யந்தி' என்று எப்போதும் பரமபதநாதனையே பார்த்துக் கொண்டிருக்கும் நித்ய ஸூரிகளோடு வேறுபாடில்லாது அனைவர்க்கும் புகலிடமாகத் திருமலை விளங்குகிறதாம்.

'வைப்பன் மணிவிளக்காம்
மாமதியை மாலுக்கென்
றெப்பொழுதும் கைநீட்டும்
யானையை - எப்பாடும்
வேடுவளைக்கக் குறவர்
வில்லெடுக்கும் வேங்கடமே
நாடுவளைத் தாடுதுமேல்நன்று'

என்னும் பாசுரத்தில் வனவிலங்குகள் திருமலையப்பனுக்குக் கைங்கர்யம் செய்யும் நிகழ்ச்சியினை ஆழ்வார் கூறுகிறார். உயர்ந்த சிகரங்களைக் கொண்ட திருமலைக்குச் சந்திரன் அணித்தாயுள்ளானாம். அணித்தாயுள்ள இக்காட்சியினை ஒரு யானை கண்ணுற்று மணிவிளக்குப் போன்று விளங்குகின்ற அந்தச் சந்திரனைப் பார்த்து அதனைத் திருநந்தா விளக்காகத் திருவேங்கடவனுக்கு ஏற்றி வைக்க எண்ணி அவ்யானை அதனைப் பிடிக்க எப்போதும் கைநீட்டிய வண்ணமாகவே உள்ளதாம். அப்படிப்பட்ட வனவிலங்குகள் திரிகின்ற திருமலையை வலம் வந்து ஆச்ரயிப்பார்களாகில் அது மிகவும் நன்மை பயக்கும் என்பதாகவும் இதுவே நமக்கு ஸ்வரூபம் என்பதாகவும் ஆழ்வார் கூறுகிறார்.

அடுத்ததாக, நல்ல நீல ரத்னம் போன்ற வடிவையுடையனான ஸர்வேச்வரனுடைய உறைவிடம் என்று திருமலையைக் கீழ்வரும் பாசுரத்தால் அநுபவிக்கிறார்.

'நன்மணி வண்ணனூர்
ஆளியும் கோளரியும்
பொன்னும் மணியும் முத்தமும்
பூமரமும் பன்மணிநீ
ரோடுபொருதுருளும் கானமும்
வானரமும்
வேடுமுடை வேங்கடம்'

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம்.ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத்தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத்தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.

அதாவது யாளியும், மிடுக்கையுடைய சிங்கமும், பொன் முதலான செல்வங்களும், பூக்கின்ற மரங்களும், பலவிதமான மணிகளைத் திரட்டிவரும் அருவிகளும், குரங்குகளும், வேடர்களுமாகிய இவற்றையுடைய திருமலை, மணிவண்ணனான திருவேங்கடவன் இருக்கும் ஊர் என்று அநுபவிக்கிருர்.

இறுதியாக, 'வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால், வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும்.... என்னும் பாசுரத்தால் திருமலையே அனைவர்க்கும் ப்ராப்யம் (அடையத் தகுந்தது) என்று ஆழ்வார் முடிக்கிருர். நித்ய ஸூரிகள் தொழுவதுவும் ஸம்ஸாரிகளின் நோய்களைத் தீர்ப்பதுவும் திருமலையேயாம். அதாவது 'ஸதா பச்யந்தி ஸூரய:' என்கிறபடியே நித்ய ஸூரிகள் திருநாட்டிலே அநுபவித்தாலும் எம்பெருமானுடைய சீலாதி குணங்கள் திருமலையில் தான் நிறம் பெறுவதாகையாலே அவற்றை அநுபவிக்கத் திருநாட்டைவிட்டுத் திருமலையில் வந்து தொழுகின்றனராம். ஸம்ஸாரிகளுக்கோவெனில் அவர்கள் செய்த கொடிய பாவங்களை எரித்துவிடுவதால் அவர்களும் வாழ்ச்சி பெற வழிவகுக்கிறது இத்திருமலை. ஆகவே அனைவர்க்கும் திருமலை ப்ராப்யம் என்கிருர் ஆழ்வார். திருமலை எம்பிரானிடம் திருமழிசைப்பிரான் கொண்ட ஈடுபாட்டை என்னென்று அநுபவிப்பது!

ஸ்ரீவேங்கடேசோ விஜயதே!
திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்!!



# தூத ஹரி

திருமதி. எஸ். வசந்தி - சென்னை.

காஞ்சி மாநகரம் வடமொழியில் நகரேஷ் காஞ்சி என்றே அழைக்கப்படுகிறது. இங்கு சைவ, வைணவ தலங்கள் பல உள்ளன. இவ்வூரில் பல வைணவத்தலங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றுதான் தூத ஹரி என்றும் பாண்டவதூதன் என்றும் அழைக்கப்படும் பாண்டவ தூதப் பெருமாள் கோயிலாகும். ஸ்ரீகிருஷ்ணன், பாண்டவர்களுக்காக கௌரவர்களிடம் தூதாகச் சென்றபோது கௌரவர் சபையில் அவர் வீற்றிருந்த கோலத்தில்தான் இத்தலத்தில் காட்சியளிக்கிறார். காஞ்சிபுரத்தில் இக்கோயில் ஏகாம்பரீஸ்வரர் கோயிலுக்கு அருகாமையில் 'திருப்பாடகம்' என்று வழங்கப்படுகிறது.

மகாபாரதப் போர் தொடங்குவதற்கு முன்பு பாண்டவர்களுக்காக ஒரு அடி நிலத்தினையாவது கௌரவர்களிடமிருந்து பெற்றுவிட வேண்டும் என்பதற்காக, கௌரவர்களிடதது தூதனாகச் சென்றார் ஸ்ரீகிருஷ்ணர். அவர் உடனே தலை நகரான அஸ்தினாபுரததை அடைந்தார். அங்கு கௌரவர்கள் சபையில் மிகப் பெரிய பட்டுக்கம்பளம் விரிக்கப் பட்ட சிம்மாசனத்தில் ஸ்ரீகிருஷ்ணன் அமர ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதனைக் கண்டவுடன் புன்முறுவலைத் தழுவ விட்ட ஸ்ரீகிருஷ்ணன் அமர்ந்த அந்த கொடியிலேயே சிம்மாசனம் சரிந்து உள்நோக்கிச் செல்லத்தொடங்கியது. பாண்டவர்களுக்குத் தூதனாக வரும் ஸ்ரீகிருஷ்ணனை அவமதிக்க எண்ணிய கௌரவர்கள் ஒரு குழிவெட்டி அதில் தழை இலை ஆகிய வற்றை இட்டு நிரப்பி அதன் மீது பட்டுக்கம்பளம் விரித்து சிம்மாசனத்தை வைத்து இருந்தனர். தன் ஆசனம் உட்புறம் செல்லத்தொடங்கிய உடனேயே ஸ்ரீகிருஷ்ணன் தன் விஸ்வ ரூபத்தினை காட்டச் செய்தார். இது மகாபாரதத்தில் நடந்த சம்பவம்.

இச்செய்தியை வைசாம்பானிடமிருந்து கேள்வியுற்ற ஜனமேஜயன் என்ற அரசன் இந்த கோலததில் இறைவன் தரிசிக்க வேண்டி காஞ்சிபுரத்தில் அஸ்வமேத யாகம் செய்தார். யாகம் முடியும் தருவாயில் இறைவன் அஸ்தினாபுரத்தில் காட்சியளித்தவாறு விஸ்வரூப தரிசனம் எடுத்தார். ஜனமே ஜயனுக்கு காட்சியளித்த இறைவனே காஞ்சிபுரம பாண்டவ தூதனாக,

'உற்று வணங்கித் தொழுமின்;
உலகு ஏழும்
முற்றும் விழுங்கும் முகில்
வண்ணன், பற்றிப்
பொருந்தாதான் மார்பு இடந்து
பூம் பாடகத்துள்
இருந்தானை ஏத்தும் என்நெஞ்சு'
(திவ் 2275)

ஏழு உலகையும் விழுங்கிய முகில வண்ணனும் இரணியனை அழித்தவனும், திருப்பாடகத்தில் இருப்பவனுமாகிய எம் பெருமானை தொழுமாறு தன் நெஞ்சினை வேண்டுகிறார் பூதத்தாழ்வார்,

இவரை அடுத்துப் பேய்ஆழ்வார்,

இசைந்த அரவமும் வெற்பும்
கடலும்
பசைந்து அங்கு அமுது படுப்ப
அசைந்து
கடைந்த வருத்தமோ-கச்சி
வெஃகாவில்
கிடந்து இருந்து நின்றதும்
அங்கு (திவ் 2345)

அதாவது, இறைவன், வாசுகியானப் பாம்பினையும், மந்தர மலையையும் கொண்டு பாற்கடலைக் கடைந்து அமுதத்தினை எடுத்துக்களைப்பு நீங்குவதற்காக திரு வெஃகாவில் துயின்றும், திருப்பாடகத்தில் வீற்றிருந்தும், திருவூரகத்தில் நின்று கொண்டும் இருக்கின்றரோ? என வினவுகின்றார்.

ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டு உள்ளதால் கி.பி. 6 அல்லது 7-ஆம் நூற்றாண்டு முதலே இத்திருத்தலம் வழிபாட்டில் இருந்திருக்கக் கூடும். கி.பி. 12-ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் இங்கு உள்ளதால் இத்தலம் தொடர்ந்து வழிபாட்டில் இருந்து வந்துள்ளது தெரிகின்றது.

இக்கோயிலில் தற்போது முதலாம் குலோத்துங்களின் ஐந்தாம் ஆட்சியாண்டு (கி.பி. 1075) கல்வெட்டு காணப்படுகிறது. இக்கல்வெட்டில் வணிகன் ஒருவன் கோயில் பூஜைக்கு தேவையான பூந்தோட்டமும், அப்பூந்தோட்டத்தைப் பராமரிக்க தோட்டக்காவலர்களையும் நியமித்து உள்ளான். இக்காவலர்களின் ஜீவ

னத்திற்காக 'ஒரு விருக்கை' என்ற கிராமத்திலிருந்த நிலங்கள் சிலவற்றையும் தானமளித்துள்ளான். எனவே, அக்காலத்தில் ஒரு தானத்தினை வழங்கி விட்டதுடன் மட்டும் நில்லாமல், அத்தானத்தினைப் பராமரிக்கும் ஏற்பாடுகளையும் மேற்கொண்ட செய்தி கல்வெட்டுக்களின் மூலம் அறியும்போது, பண்டைய காலத்தில் மக்கள் ஒரு செயலை முழுமையாக செய்துள்ளனர் என்பது தெளிவாகத் தெரிகிறது. இதே மன்னனின் 39ஆம் ஆட்சி யாண்டு கல்வெட்டில் பாண்டவதூதனுக்கு இரண்டு நாழிகை தயிர் நைவேத்தியம் அளிக்கப்பட்டது. இவ்வாறு தயிர் நைவேத்தியத்திற்கு இரண்டு கழஞ்சு, இரண்டு மஞ்சாடி பொன்னை வணிகன் ஒருவன் தானமளித்துள்ளான். கல்வெட்டுக்களில் இறைவன் 'பாண்டவ பெருமாள்' எனவும் 'தூதஹரி என்றும் வழங்கப்படுகிறார்.

கிழக்கு நோக்கியுள்ள சன்னதியில், ஸ்ரீகிருஷ்ணர் நீண்ட நெடிந்துயர்ந்த, அமர்ந்த திருக்கோலத்தில், வலதுகரம் வரத முத்திரையையும், இடதுகரம் அபய முத்திரையையும் காட்டி அருள்புரிகின்றார். இவ்விறைவன் சுதையால் ஆனவர். இவர் உடுத்தியுள்ள ஆடை அழகிய பூவேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளது. இறைவன் சன்னதிக்கு இருபுறமும் தாயார் ருக்மணி மற்றும் சத்யபாமா சன்னதிகள் உள்ளன.

கல்வெட்டில் காணப்பட்ட தயிர் நைவேத்திய தானத்தினைப்பற்றி அறிந்த காஞ்சிப் பெரியவர் ஸ்ரீசந்திர சேகர சரஸ்வதி சுவாமிகள் அவர்கள் கூறியதற்கிணங்க, காஞ்சி ஸ்ரீமடத்திலிருந்து நாள்தோறும் இறைவனுக்கு தயிர் நைவேத்தியத்திற்கு வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஸ்ரீகிருஷ்ணரின் தலங்கள் சிலவற்றில் ஒன்றான இத்தலம் 108 வைணவத் தலங்களில் ஒன்றாகும். காஞ்சிக்குச் செல்லும் அனைவரும் தரிசிக்க வேண்டிய முக்கியமானத் திருத்தலம்.



## திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றாக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஒய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

# இறைவழிபாட்டில் இன்பம் காணல்

திரு. வெ. சுந்தரம் ஐயர் - பரமக்குடி.

### அஷ்டாங்க யோகம் :

எட்டுவிதப் படிகளைக் கொண்டது அஷ்டாங்க யோகம் என்பர். அவைகள் யமம், நியமம், ஆசனம், பிராணுயாமம் பிரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி எனப்படும்.

### யமம்

யமம் என்பது அஹிம்ஸை, சத்யம், திருடாமை, பிரம்மச்சரியம் பிறர் பொருளை விரும்பாமை ஆகிய பண்புகளைக் கொண்டதாகும்.

### நியமம்

நியமம் என்பது ஸ்னானம், தவம், நல்ல பயனுள்ள நூல்களைக் கற்றறிதல், கடவுளை வணங்குதல் போன்ற பண்புகளாகும்.

### ஆசனம்

திருக்கோயில்கள் தவிர மற்ற இடங்களில் அமருமிடத்தில் ஏதேனும் விரிப்பு விரித்து அதன்மீது அமர்ந்து அல்லது பலகை போன்ற ஆசனத்தில் சுகாசனம், பத்மாசனம் போன்ற ஏதேனும் ஒரு முறையைக் கடைப்பிடித்து அமர்ந்து தியானம், பூஜை, தவம் மேற்கொள்ளுதலாகும்.

### பிராணுயாமம்

நாசித்துவாரங்களில் இடா, பிங்கலா என்ற நாசிகளின் வழியே சுவாஸத்தை நிறுத்தி ஒழுங்காக உள் இழுத்து வெளி விடல், வாத, பித்த, சிலேட்டுமத்தை நீக்குவதோடு உடலும் மனமும் செம்மையுறும்.

### பிரத்யாஹாரம்

சித்தத்தில் பலவேறு எண்ண அலைகள் மாறி மாறித் தோன்றுவதை ஒன்றின்மீது (இறையுணர்வில்) உள்முகமாக உடலில் நினைவாற்றலில் அமைத்தல் வேண்டும். அலைபாயும் எண்ணங்களைக் கட்டுக்குள் அமைத்தல் சற்றே சிரமமானாலும் முயற்சி திருவினை ஆக்கும். இதுவே பிரத்யாஹாரம் ஆகும். மந்திரங்கள் பூஜைகள் மனக்கட்டுப்பாட்டுக்கு வித்திடல் ஆகும்.

### தாரணை

சித்தம் இந்திரியங்களின் (உடலுறுப்புக்கள்) மூலம் வெளியேறுதபடி வெள்ளநீருக்கு அணை கட்டுவதுபோல கட்டுப்பாட்டில் உறுப்புகள் அமைய அமைதியை கைக்கொள்ளல் தாரணை எனப்படும்.

### தியானம்

ஒரு நிலைப்பட்ட சித்தம் கட்டுக்குள் லயப்படும்போது இறையின் முழு உருவத்தையோ அல்லது திருவடி முதல் திருமுடி வரை அங்கம் அங்கமாக தியானம் (நினைவில் நிலை நிறுத்துதல்) செய்ய வேண்டும்.

### ஸமாதி

இறையின்பால் கொண்ட நினைவில் நீண்ட நேரம் லயித்திருப்பது, தன்னையுணர்தல் இறையம்ஸமாக தன்னை பாவித்து ஆனந்தத்தில் திளைப்பதாகும்.

இறைவழிபாடு என்பதே முறையாக வழிபட்டு பேரின்பம் காணுதல் ஆகும். அஷ்டாங்கயோகம் அதற்குரிய நற்படிகளாக அமைந்தவையாகும்.

### வீடு சொல்லும் உண்மை (அ) வீடுபேறு

வீட்டின் முதலில் இருப்பது படி. அது நம்மை படித்துக்கொண்டே இருக்கவேண்டும் என்பதாகும். அடுத்தது நடை. படித்தறிந்த நல்லொழுக்கநெறிகளில் கடைப்பிடித்து நடக்க வேண்டும் என்பதாகும். அடுத்தது கூடம். கூடி வாழ வேண்டும். விட்டுக்கொடுக்கும் மனப்பக்குவம் அமைய அறிவுறுத்தும் அடுத்ததோ அல்லது பக்கத்திலோ முற்றம். நலவாழ்வின் லட்சியம் முற்றுப் பெறச் செய்ய வேண்டும். அது இறையாற்றலை தன்னில் நிலைநிறுத்துவதாகும். இதுவே வீடுபேறு அல்லது இன்பநிலையாகும்.

### நன்னெறிகள் எட்டும் இன்பம் கூட்டும்

(1) தியானம் அல்லது தவம் செய்தல், (2) மகிழ்வுடன் இருப்பது, (3) இறையை நம்புதல், (4) இறைவழிபாட்டினை மன

மொன்றிச் செய்தல், (5) நீதி நெறியுடைய நல்ல நூல்களை அடியார்கள் வரலாறுகளைக் கற்றல், (6) இறையின் திருநாமம் கூறியே எச்செயலும் செய்தல் - அதாவது திருநாமம் உச்சரித்தல், (7) ஹோமம் செய்தல் - செய்யுமிடங்களில் கலந்து கொண்டு செய்தல் (8) விரத மிருத்தல், விரதம் மூலம் இறையின் திருஉருவைத் தன்னுள் இருத்திடல். இவற்றால் எளிதில் இன்பம் கூடிவரும்.

இறையை உள்ளத்தில் இருத்தி இறையின் பூரணதத்துவம் தன்னில் இணைத்துப் பேரின்பமடைவதே பெற்ற பேறுகளில் சிறந்ததாகும். இதையே "To know God know Thyself" என்பர். தன்னை அறிந்தால் தலைவனை அறியலாம். என்பதே அதன் பொருளன்றோ?

எல்லோரும் இன்பமுற்றிருக்கத் தன்நிலையை இறைத்தன்மையாக்கி அன்பில் பிறருக்கு உதவுதலே வாழப் பிறந்ததன் நோக்கம் என்பதை உணர்ந்து செயல் படுவோம். சிறப்புப் பெறுவோம்.

நல்லதே நாளும் எண்ணி
நல்லதே செய்யும் போது
நல்லதே நம்மை நாடும்
நல்லதே நின்று நிலவும்.



# அன்புடன் அழைப்பான் வேங்கடமே!

கவிஞர் எம்.வி. குமார் - மதுராந்தகம்.

பச்சை மரகத மாமலை மீதினில்
பைந்தமிழ் பரமன் சிரிக்கின்றான்
பூமகள் தன்னை மார்பினில் இருத்தி
பூவுலகம் தனை காக்கின்றான்
எத்தனை அழகு எத்தனை வளமை
எல்லாம் அவனருள் அற்புதமும்;
பொன்னுடன் மணியும் தாங்கிய இறைவன்
அன்புடன் அழைப்பான வேங்கடமே!

நாரணன் புகழை பாடிடும் அன்பர்
நாளும் வருவார் ஒருகோடி
நானிலம் மீதினில் மாலவன் தெய்வம்
என்றே சொல்வார் ஒருகோடி
கோவிந்தா ஹரி கோவிந்தா ஹரி
நாம கீதமே கேட்டிடுமே
கோகுல கண்ணன் கோவிந்தனால் நின்று
பாடிட அழைப்பதும் வேங்கடமே!

நடந்து சென்று படிகள் கடந்தால்
பாவம் தீர்த்திடுவான்
நாமம் ஒருமுறை சொன்னால் போதும்
நலமே தந்திடுவான்
ஒருமுறை திருமுக தரிசனம் கண்டால்
நெஞ்சம் இனித்திடுமே
ஒவ்வொரு நாளும் வருவாய் வருவாய்
என்றே அழைக்கும் வேங்கடமே!

புண்ணிய திருவடி தாங்கிய திருமலை
மீதினில் அருளே சுரக்கும்
பூலோகம் தனில் வைகுந்தம் இதுவென
அன்பர்கள் மனமும் நினைக்கும்
ஒருமுறை திருமலை வந்தால் போதும்
வாழ்வு சிறந்திடுமே
ஏழேழ் பிறப்பிலும் பாவம் துடைத்து
எண்ணிய தனிக்கும் வேங்கடமே!

நினைத்தது நடக்கும் கேட்டது கிடைக்கும்
திருமலை வாசன் சன்னதியில்
பரமனின் பாசுரம் படித்தால் இனிக்கும்
பாழ்வினை களையும் வாழ்வில்
பார்த்திட பரவசம் கேட்டிட இனிமை
திருமலை மீதினிலே
பாரில் பரமன் மலைமேல் நின்று
அருள அழைப்பதும் வேங்கடமே!

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றுகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கபபட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட் காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண் டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸதானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப் பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரி யாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிறகலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட் டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றுண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

*கோயில் நிர்மாண விளக்கங்கள் :* ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள, முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளககப்பட்டுள்ளன.

*சிற்ப அளவு முறைகள் :* ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

*சிற்பங்கள் :* விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையின ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

*ஆழ்வார்கள் :* தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

*வைதீகச் சடங்குகள் :* அஷ்டதஸ சம்ஸ்காரங்கள இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரஙகள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போனறவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

*கலைகள் :* இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின சிறப்பு தெரிவிக்கப்பட் டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுளளன. குண்டரபாக்கததில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

*அனுமதி நேரம்:* காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

*அனுமதிக் கட்டணம்:* பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

# "ஒன்று விட்டு ஒன்று பற்றி"

திரு. எஸ துரைசாமி - ஒசூர்.

ஒவ்வொரு மனிதனும் அளவு கடந்த இன்பத்தை அனுபவிக்கும் போதும், அளவு கடந்த துன்பத்தை அடையும்போதும், சுவைப்பதும், சுவைத்தபின் அதை வெறுப்பதும், வெறுத்தபின் அதை வேண்டுவதும் எது வென்று ஆய்ந்து அதை அறுதியிட்டு உறுதியாக நம் பெரியவர்கள், சான்றோர்கள், பக்தர்கள், யோகிகள், ஞானிகள் கூறினார்கள். அவ்வளவும் 'மனம்' தான் என்று! அன்று அவர்கள் சொன்னது இன்றும் வேத வாக்காக உள்ளதை நினைக்கும் போது உள்ளம் பூரிக்கிறது - உண்மைத் தத்துவத்தை உணர்வதுதான், மெய் சிலிர்க்கிறது - மெய்ஞானமுடிவை நினைத்து, எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் நமது வேதம் சொல்லும்போது:

"மனம் ஒரு குரங்கு. அதுவும் ஆண்குரங்கு. அதிலும் பைத்தியம் பிடித்த குரங்கு, அதுவும் இஞ்சி தின்ற குரங்கு. அந்தக் குரங்கும் தென்னை மரத்தின் மீது ஏறிக்கொண்டது. மரத்தில் இருந்த கள்ளைக்குடித்துக் கொண்டது. போதை ஏறியதும் தலைகீழாக தென்னக் கிளையை பிடித்துத் தொங்கியது. தொங்கிய நேரத்தில் அதை தேள் கொட்டியது. உடனே கிளையைவிட்டு, கீழே சாய்ந்தது. கீழே விழுந்ததும் பம்பரம் போல் சுழன்றது. பந்துபோல் உயர் எழும்பியது. கிடைக்காத பெரு நிதியம் கிடைத்தது போல் நிலைகொள்ளாமல் ஓடியது". அந்தோ! அதன் நிலையை வர்ணிக்க முடியாது!

ஒருகணம் மனக்கண் முன் இக்காட்சியை நிறுத்துங்கள்! சிந்தியுங்கள் சிறிது! இப்போது விளங்கியிருக்கும் அதன்நிலை!

அதைப்போன்றது தான் நம் மனத்தின் நிலை!

பல் வகையான நறுமண சோப்பு வகைகளை போட்டு உடலை தூய்மைப் படுத்துகிறோம். அது உடலுக்கு சுகாதாரத்தை கொடுக்கிறது. வீட்டில் மண்டிக்கிடக்கும் குப்பையைப் பெருக்கி தூய்மைப் படுத்துகிறோம். அது வீட்டில் உள்ளவர்களுக்கு சுகாதாரத்தை கொடுக்கிறது. வீதியில் ஓடும் சாக்கடையை தூய்மை செய்கிறோம். அது வீதியில் உள்ள மக்களுக்கு சுகாதாரத்தை கொடுக்கிறது. ஊரில் குடி தண்ணீர் கிணற்றை தூய்மைப் படுத்துகிறோம். அது ஊரில் வசிக்கும் அனைவருக்கும் சுகாதாரத்தை கொடுககிறது.

இப்படியே ஒவ்வொரு நிலையிலும் தம்மை, வீட்டை வீதியை, ஊரை சமுதாயத்தை - தூய்மைப்படுத்தும் நாம், நம் மனத்தை, கிஞ்சித்தும் தூய்மை செய்ய நினைத்ததுண்டா? அன்பர்களே சிந்தியுங்கள்.

மனத்தூய்மையின்றி நாம் பிழைக்கமுடியுமா? என்ன? என்று நம்மவர்கள் கேள்வியை எழுப்பலாம்.

கேள்விக்கு நடமாடும் தெய்வம், அன்னை ஆதிபராசக்தி, மேல்மருவத்தூர் தாயே தன் அருள்வாக்கில் சொல்லும் போது:

நீரில் வாழும் புழுபூச்சிகள்
மீனுக்கு இரையாகின்றன;
மீன் தவளைக்கு இரையாகின்றது;
தவளை பாம்புக்கு இரையாகின்றது;
பாம்பு கருடனுக்கு இரையாகின்றது;
கருடன் விலங்குக்கு இரையாகின்றது;
விலங்கு மனிதனுக்கு
இரையாகின்றது;
மனிதன் "மனத்துக்கு
இரையாகின்றான்."

என்றால் இதற்குமேல் என்ன சான்று வேண்டும் அன்பர்களே!

மனத்தூய்மையின்றி நல்ல எண்ணங்கள் மனதில் தோன்றா; நல்ல எண்ணங்கள் இல்லையேல், நல்ல சொல் வாயில் பிறவா; நல்ல சொல் இல்லையேல்; நல்ல செயல் கிஞ்சித்தும் நம்மிடையே தோன்றா!

எண்ணம் - சொல் செயல் - இவை மூன்றிற்கும் எப்போது முரண்பாடு வருகிறதோ, அப்போதே மனிதன் மனத்துக்கு இரையாகிவிட்டான் என்று பெரியவர்கள் கூறுகிறார்கள். அப்போதே மனித குலம் நேர்மையினை வழுவுகிறது. பொய்யும், புரட்டும்

விரிக்கின்ற வலையில் வீழ்ந்து விடுகிறது சமுதாயம். அங்கே மனிதத்தன்மை அழிந்துபோய் - மிருகத்தன்மையின் ஆட்சி மக்கள் மனத்தை வென்றுவிடும்.

இந்த ஆட்சிதான் திருட்டு, கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்ற சமுதாய குற்றங்கள் - செய்ய வைத்து, நம் அகத்தே இருந்து நம்மை ஆட்டி வைக்கும். அப்படி ஆட்டப்படும் பம்பரம்போல், ஆடும் போதும் - ஆடாமல் நிற்பவர் யார்! அன்பர்களே! இப்போது புரிகிறதா! மனத்தூய்மை எவ்வளவு முக்கியத்துவம் என்பதை!

சமுதாயத்தை கெடுப்பது மட்டுமில்லாமல் தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொள்கிறுர்கள். சுருங்கச் சொன்னால் தங்களையே அழித்துக்கொள்கிறுர்கள்.

அழுக்குப் படிந்த கண்ணுடியில் எப்படி முகம் பார்க்க முடிவதில்லையோ? அவ்வாறே அழுக்குப் படிந்துள்ள மனத்தினருக்கு, நீதி, நேர்மை, சத்தியம், பண்பு, அன்பு, கருணை, ஒழுக்கம், இவை அவர்கள் அறிவுக்கு எட்டுவதில்லை!

ஆன்மீகத்தைச் சொல்ல வந்தயான்; அரசியல் பேசுவானே! என்று நீங்கள் நினைக்கலாம்!

"தெய்வ பக்தியும், தேச பக்தியும் பிரிக்கமுடியாதவைகள்; தேச பக்தி என்பது எப்படி ஒரு தேசத்தின் மக்களுக்கு ஆற்றும் தொண்டை முதன்மை படுத்திச் சொல்லப் படுகிறதோ; அதே போல் தெய்வத்தொண்டு என்பது மனித இனம் முழுவதுமாகச் செய்யும் தொண்டேயாகும்" என்று வீரத்துறவி விவேகானந்தர் கூறியதுவே! உங்களுக்கு பதிலாகும்.

கடிகாரத்தின பெண்டுலம் போல் யானையின் துதிக்கை போல் ஓயாமல் ஆடிக்கொண்டிருக்கிற நமது மனத்தின் பிடியில் நாம் சிக்கிக் கொண்டால் கடிவாளம், இல்லாத குதிரை எப்படி தன் இஷ்டப்படி தாறுமாருக மேடு, பள்ளம், காடு, மலை என்று ஓடி வண்டியை கவிழ்த்துவிட்டு தானும் விழுந்து விடுமோ, அதுபோல் நம் மனம் ஆசைப்பட்டு அந்த ஆசைக்கே பலியாகி நம்மையும், பலியாக்கிவிடும் என்பதை தாயுமானசுவாமி கூறும்போது:

"ஆசைக்கு ஓர் அளவு இல்லை
அகிலம் எல்லாம் கட்டி
ஆளினும் கடல் மீதிலே
ஆணை செலவே நினைவர்;
அளகேசன் நிகராக
அம்பொன் மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக்கு
அலைந்திடுவர்
நெடுநாள் இருந்தபேரும்
நிலையாகவே இனும் காயகற்பம்
தேடி
நெஞ்சு புண் ஆவர் எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசிதீர
உண்பதும்
உறங்குவதும் ஆகமுடியும்
உள்ளதே போதும் நான் நான்
எனக்குளறியே
ஒன்றைவிட்டு ஒன்றுபற்றிப்
பாசக்கடற்குளே வீழாமல்
மனது அற்ற
பரிசுத்த நிலையை அருள்வாய்
பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கம்
அறநிறைகின்ற
பரிபூரணனந்தமே!"
என்கிறுர்.

மனதுமாற, மனம் வெளுக்க, தூய்மைப்பட ஒருமுறை பக்தர்கள் எல்லோரும் கர்நாடக திருவள்ளுவர், யோகி வேமண்ணு அவர்களை காசி, அயோத்தி போன்ற புனித இடங்களிலுள்ள நதிகளில் நீராடி, புனிதயாத்திரை சென்று வர அழைத்தார்கள். அப்போது அந்த யோகீஸ்வரர் சொன்னாராம்! எதற்காக எல்லோரும் செல்லுகிறுர்கள் என்று கேட்டாராம்!

கூட்டத்தில் இருந்த யோகீஸ்வரரின் தாய் உட்பட எல்லோரும் எங்களை புனிதமானவர்களாக மாற்றிக்கொள்ளப்போகிறேம்! என்றும் சொன்னார்களாம்.

அவர் சிறிதுநேரம் யோசித்துவிட்டு! நான் இப்போது வருவதற்கில்லை! ஆகவே நான் ஒரு வெள்ளி நாணயம் தருகிறேன் தாயே! அதை உங்களோடு எல்லா ஆறுகள், நதிகள் கோவில்களுக்கு கொண்டு சென்று வாருங்கள் என்று, தாயார் கையில் அதைகட்டி விட்டாராம்.

புனிதயாத்திரை முடிந்து திரும்பிவந்த தாயாரும், மற்றவர்களும் பிரசாதம் வழங்கவேண்டி யோகி வேமன்னா அவர்களை வந்தடைந்தார்கள். யோகிஸ்வரர் மயானத்தில் தியானத்தில் அமர்ந்திருந்தார். மக்களின் கூச்சலால் தியானம் கலைந்தது. உடனே பிரசாதம் வழங்க தாயார், மகனிடம் சென்றுர்! சுவாமி மறவாமல் தாயாரிடம் தான் கொடுத்த வெள்ளி நாணயத்தை கேட்டார். தாயாரும் கொடுத்தார்கள். வாங்கி அவர் பார்த்த விதம் மற்றவர்கள் கவனத்தை கவர்ந்தது. உடனே தாயாரும், மற்றவர்களும் சுவாமியைப் பார்த்து என்ன யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று கேட்டார்களாம்.

சுவாமி சொன்னார்! எல்லோரும் பாவத்தை நீக்கி, புண்ணியஸ்தர்களாகவும், புனிதமானவர்களாகவும் மாறிவிட்டதாக நீங்கள் கூறினீர்களே! ஆனால் இந்த வெள்ளி நாணயம் என்ன! தங்கம் நாணயம் ஆகவில்லை? என்று பார்க்கிறேன், என்று சொல்லியதும், எல்லோரும் வெட்கத்தால் நாணி பேச்சற்று போனார்கள்! அப்போது சுவாமி சொன்னார் உங்கள் மனத்தை செம்மையாக்காதவரை, உள்ளத்தை தூய்மையாக்காதவரை புனிதயாத்திரை, பூஜை எல்லாம் வெறும் சடங்குகளே! புனிதத்தை தேடி எங்கோ போக வேண்டியதில்லை! மனம் புனிதமாக வேண்டும்!

இதைத்தான் பதினெட்டுச சித்தர் பெருமானில் மூத்தவர் திருமூலர் சொன்னார்:

“மனமது செம்மையானால்
மந்திரம் செம்மையாமே”

என்று. ஒன்றைவிட்டு ஒன்றைபற்றுகின்ற மனமே! உன்னை நான் பற்றினேன். பற்றை அறுத்து; ஒன்றைவிட்டு ஒன்றைபற்றுகின்ற மனமே! உன்னை அடக்கினேன். ஆசை அறுத்து! என சூளுரைத்து பற்றற்றவனின் பாதங்களை சரணடை! நம்பிக்கை வைத்து சரணடை! பற்றற்ற மனம் அருள்வான் பரமேஸ்வரன்! அப்போது சாந்தி கிட்டும் உனக்கு; நலம் கிட்டும் மனித குலத்திற்கு!



# காட்டழகர் கோவில்-செண்பகத்தோப்பு

திரு. பி. ராமானுஜம் - சிவகாசி.

காமராஜர் மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூர் அருகே செண்பகத்தோப்பு அருகில் மேற்கு தொடர்ச்சி மலையில் திருமாலிருஞ்சோலை என்ற பெயர் உள்ள ஸ்ரீவைஷ்ணவ தலமே காட்டழகர் கோவில் என பெயர்படும். இது புராதன பழமையான வைஷ்ணவ ஸ்தலங்களில் ஒன்ருகும். இங்கு நின்ற திருக்கோலத்துடன் ஸ்ரீசுந்தரராஜப் பெருமாள் (காட்டழுகர்) ஸ்ரீதேவி, பூதேவி தாயாருடன் காட்சியளிக்கிருர். மண்டுக மகரிஷிக்கு சாபம் தீர்ந்த இடமாகும். இக்கோயிலையடைய செண்பகத்தோப்பு என்னும் இடத்திலிருந்து காட்டுப்பாதையில் 6 கி.மீ. நடந்து சுமார் 220 படிகள் ஏறி அடைய வேண்டும். இந்தியாவில் இயற்கையாக நான்கு நீர் ஊற்றுகள் உள்ளன. பத்ரிநாத், கேதார்நாத் என்ற இரண்டு இடங்களிலும் கௌரி குண்ட், தப்த குண்ட் என்ற வெந்நீர் ஊற்றுகளும் மதுரை கள்ளழகர் கோவில், காட்டழகர் கோவில் என்ற இரண்டு இடங்களில் குளிர்ந்த நீர் ஊற்றுடன் நூபுர கங்கை என்ற பெயருடன் அமைந்துள்ளது. வருடம் முழுவதும் ஒரே மாதிரியாக இந்த நீர் ஊற்றுகளில் தண்ணீர் வந்து கொண்டே இருப்பதும் மிகவும் அதிசயமாகும். இந்த கோவிலில் சித்தர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். இளம் யானைகள் நடமாடும் காடாகவும் உள்ளது. இந்த கோவில் ஒவ்வொரு சனி, ஞாயிறு மட்டும் திறந்திருக்கும். இங்கு சித்திரை மாதம் ஆடி மாதம், புரட்டாசி மாதம் ஆகிய மாதங்களில் பெருமாளுக்கு விசேஷ உற்சவங்கள் நடைபெறுகிறது. இங்கு காட்டுகோவில் ஆதலால் மின் வசதி கிடையாது. இங்குள்ள நூபுர கங்கை தண்ணீர் இரும்பு சத்து மற்றும் மூலிகை சத்துக்கள் அடங்கிய தாகும். இங்குள்ள நூபுர கங்கையில் 45 நாள் தீர்த்தமாடி 8 மிளகு, 8 துளசி இலையுடன் இந்த நீரை சாப்பிட்டு அழகர் சுந்தரராஜ பெருமாள் தரிசனம் செய்பவர்களுக்கு சகல வியாதிகளும் தீர்ந்து வருகிறது. இங்குள்ள நூபுர கங்கையில் தீர்த்தமாடி சுந்தரராஜ பெருமாள் தாயாரை தரிசனம் செய்பவர்கள் புத்ரபாக்கியம், கல்யாணம் கைகூடுதல், வியாபாரம் அபிவிருத்தி சகல தோஷங்கள் நீங்குதல், மன அமைதி முதலியன மற்றும் சகல சௌபாக்கியங்களும் கிடைக்கிறது. இங்கு ஒவ்வொரு விசேஷ காலங்களிலும் இந்த நூபுர கங்கை அருகே உள்ள கம்பு கேட் அமைந்துள்ள இடங்களில் அன்னதானம், நடந்துவருகிறது. இந்த காட்டழகர் கோவில் அருகே தான அழகர் அணை திட்டம், நிறைவேற ஏற்பாடுகள் நடந்து வருகிறது.

இந்த காட்டழகர் கோவில் இந்து சமய அறநிலையத்துறையைச் சேர்ந்த ஸ்ரீவில்லிப்புத்தூர் ஆண்டாள் கோவிலைச் சேர்ந்த உபகோவிலாகும். தினசரி காலை மாலை பி.ஆர்.சி. பஸ்கள் செல்கின்றன. மற்றும் விசேஷ காலங்களில் சிறப்பு பஸ்கள், வாகனங்கள் செல்லுகின்றன. செண்பகத்தோப்பிலிருந்து காட்டழகர் கோவில் செல்லும் வழியில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் கோட்ட கருப்பசாமி என்ற பெருமாளின் காவல் தெய்வக் கோவில் உள்ளது. இந்த கோவில் ஏராளமான பக்தர்களுக்கு குலதெய்வமாக உள்ளது. இந்த கோவில் கூடிய விரைவில் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை அனுமதியுடன் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் நடக்க உள்ளது. இந்த கோவில் சனி, ஞாயிறு கிழமைகளில் காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை மட்டுமே திறந்திருக்கும். அனைவரும் தரிசித்து பெருமாள் தாயாரின் அருள்பெற வேண்டுகிறேம். இந்த இடத்தில் ஹோட்டல் வசதியோ, கடை வசதியோ கிடையாது. பக்தர்கள் சாப்பாடு வசதிகளுடன் செல்ல வேண்டும். இங்கு தங்குவதற்கு இரும்பு கேட்டுடன் கூடிய மண்டபங்கள் உள்ளன.



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

### பதினாறும் அத்தியாயம்

## தெய்வாஸுர ஸம்பத் விபாகயோகம்

(உமைப்ரியன்)

பகவான் கூறியது :

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய
நஷ்டாத்மானோ அல்பபுத்தய: |
ப்ரவந்த்யுக்ரகர்மாண:
க்ஷயாய ஜகதோ அஹிதா: || (9)

"இதுபோன்ற கொள்கை உடையவர்கள் (அசுர இயல்பு மனப்போக்காளர்கள்) அற்ப புத்தி கொண்டவர்கள் (புல்லறிவாளர்கள்); ஆன்ம பலத்தை இழந்தவர்கள்; கொடுமையான செயல்களைப் புரிபவர்கள்; உலகத்திற்கு எதிரிகள்; இந்த உலகத்தை அழிப்பதற்கென்றே பிறந்தவர்கள்."

[சினம் எனும் ஒரு தீய மன உணர்வே மற்றைய நல்ல இயல்புகளையும் அழித்துவிடும். ஆகவே அசுர இயல்பு கொண்டவர்களிடத்து விளங்கிடும் ஒரு குறையே பல குறைகளுக்கு பல அழிவுகளுக்கு வழிகாட்டும். புலனின்பங்களுக்கு அடிமைப்பட்டு, இறை உணர்வை - மனித நேயத்தை மறக்கும் ஒருவன் தன் அறிவைப் பயன்படுத்தும் ஆற்றலை இழக்கிறான். இவனே புல்லறிவாளன். அறம் எனும் தர்ம நெறி அவ்விடம் மறைந்துவிடுகிறது. இதன் விளைவாக தன் அழிவுக்குத் தானே காரணமாகின்றான். மனச்சாட்சி, ஆன்மா ஆகியன அவன் வசம் இருப்பதில்லை. மனசாட்சியினை மறக்கின்றான், ஆன்மாவை இழக்கின்றான். இதனால் அவையே அவனுக்குப் பகையாகின்றன. இதனால் மன அமைதியினை இழக்கின்றான். இதன் விளைவாக அவன் சொல்லும், செயலும் அழிவுக்கு வித்திடுகின்றன. அதனால் அவன் பிறப்பே அழிவிற்கே என்று உறுதியாகி



விடுகின்றது. ஏனென்றால் அவனால் அவனுக்கோ, வாழும் சமுதாயத்திற்கோ எந்த விதமான பயனும் இல்லை.]

காமமாச்ரித்ய துஷ்பூரம்
தம்பமானமதான்விதா: |
மோஹாத் க்ருஹீத்வா
அஸத்க்ராஹான்
ப்ரவர்த்தந்தே அசுசி வ்ரதா: ॥ (10)

"(தொடர்ந்து எழும் உணர்வால்) நிறைவேறாத நெடுங்காம உணர்வு கொண்டவர்களாய், ஆடம்பரம், தற்பெருமை, மதம் உடையவர்களாய், அறிவு மயக்கத்தால் தீய எண்ணங்களை மேற்கொண்டு அழிவு நோக்கி செயல் புரிகின்றனர்."

[எல்லா உணர்வுகளைவிட மிகவும் ஆபத்தானது காம உணர்வு. காமம் கண்களை மறைக்கும்போது மனிதன் எந்த நிலைக்கும் தள்ளப்படுகின்றான். சினம், பொறாமை, வன்முறை ஆகியன காம உணர்வை நிறைவேற்றிக்கொள்ள துணைபோகின்றன. காமம், உறவு, வயது நிலைகளைக்கூட மறைத்துவிடுகிறது. இந்த இன்ப உணர்வுகளுக்கு அடிமையாகும்போது மனிதனிடம் தற்பெருமை, தான், தனது எனும் மதம், வீண் ஆடம்பரம் போன்ற உள்ள, உடல் ஆசைகள் தலையெடுக்க ஆரம்பித்து விடுகின்றன. காமவயப்பட்டவனின் அறிவு, சிந்திக்கும் திறன் தன் ஆற்றலை இழந்து மன மயக்கத்தில் தவறான எண்ணங்களை மேற்கொண்டு, அவற்றை செயல்படுத்திட முனையும் போது அவன் தீய விளைவுகளையே முடிவுகளையே எதிர்படுகின்றான்.]

சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தா-
முபாச்ரிதா: |
காமோபபோகபரமா ஏதாவிதிதி
நிஸ்சிதா: ॥ (11)

"இவர்கள் (அசுர இயல்பு கொண்டவர்கள்) இறக்கும்வரை அளவு கடந்த மனக்கவலை கொண்டவர்களாய், காமத்தால் பெறும் இன்பமே நிலையானது, உயர்வானது, இதனைத்தவிர மேலானது ஒன்றும் இல்லை என்று தீர்மானித்தவர்களாய்"

ஆசாபாசசதைர்பத்தா: காமக்ரோத-
பராயணா: |
ஈஹந்தே காமபோகார்த்தமன்யா
யேனார்த்தஸஞ்சயான் ॥ (12)

"நூற்றுக்கணக்கான ஆசை எனும் கயிறுகளால் கட்டப்பட்டவர்களாய், காமம் மற்றும் குரோத உணர்வுகளுக்கு அடிமைப்பட்டவர்களாய், காம இன்பத்திற்காக பெருஞ் செல்வம் சேர்த்திடும் முயற்சியினை மேற்கொண்டவர்களாகவும் விளங்குவர்."

[இவ்விரண்டு செய்யுட்களிலும், காமத்தின் இயல்பு சொல்லப்பட்டுள்ளது. காமத்தையே பெரிதாக நினைத்திடும் இவர்கள் தங்கள் மூச்சு உள்ளவரை மனக்கவலைகளாலேயே சூழ்ந்திருப்பவர். திரும்பத்திரும்பப் பெற்றிடும் இவ்வுணர்வுகளால், மற்ற நல்ல இயல்புகளை மறந்து, காமமே வாழ்வின் அடிப்படை தேவை என்று 'சிட்டுக்குருவி' போன்று காமத்திலேயே ஆழ்ந்திருப்பவர். மது, மங்கை மாமிசமே இவர்களது அன்றாடத் தேவைகளாக அமையும். தொடர்ந்துவரும் இவர்களது காம ஆசை அவர்களது பிறவியைத் தொடர்ந்தும் வரும். நிறைவேறாத அந்த ஆசையே ஒரு பெரும் கவலையாக அவர்கள் வாழ்வில் அமைந்திடும். முட்செடிகள் என்றாலும் அவற்றின் தளிர்களைத் தின்னும்போது அம்முட்கள் தங்கள் வாயினை பதம் பார்த்து ரத்தத்தை வழியவிட்டாலும், அம்முட்செடிகளையே நாடிச்சென்றுத் தின்றிடும் ஒட்டகங்கள் போன்றே மக்களும் விளங்குகின்றனர். இந்த அசுர இயல்பு கொண்டவர்கள் தங்கள் எண்ணம் நிறைவேற்றிக் கொள்ள எந்நேரமும் செயல்படுவதால் அவர்கள் பேராசை கொண்டவர்களாக விளங்குவர். தங்க போக வழ்க்கைக்காக அதர்ம வழியில் சென்று லஞ்சம், ஏமாற்றம் என்ற வழிகளில் பெரும் செல்வத்தை சேர்க்கவே நாளும் பாடுபடுவர். அதனால் ஆசை என்னும் கயிறுகளால் எந்நேரமும் கட்டுண்டு, காமம், ஆடம்பரம், அகந்தை, கோபம் என்று நாளும் பல தீய மன இயல்புகளால் அலைகழிக்கப்பட்டு வருந்தி வாடுவர். ஆனாலும் காம மயக்கத்தில் இவற்றை தாங்கவும் செய்வர்.]

இதமத்ய மயா லப்தமிதம்
ப்ராப்ஸ்யே மனோரதம் |
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி
புனர்தனம் ॥ (13)

"இன்று, இது என்னால் கிடைக்கப்பெற்றது; இன்று என் ஆசையை நிறைவேற்றிக் கொள்வேன்; இது இந்தச் செல்வம் மேலும் என்னிடம் பெருகும்."

அஸௌ மயா ஹத: சத்ருர்
ஹனிஷ்யே சாபரானபி |
ஈச்வரோஹ மஹம் போகீ ஸித்தோ
அஹம் பலவான்ஸுகீ ॥ (14)

"அந்த பகைவன் என்னால் அழிக்கப்பட்டான்; மற்றவர்க

ளையும் அழிப்பேன்; நான் ஆளப்பிறந்தவன்; போகத்தை அனுபவிப்பவன்; எந்தக் காரி யமேனும் நான் நிறைவேற் றுவேன்; நான் பலமுள்ளவன்; இன்பத்தை அனுபவிப்பவன்."

ஆட்யோ அபிஜனவானஸ்மி கோ
அன்யோ அஸ்தி ஸத்ருசோ மயா ।
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய
இத்யக்ஞான விமோஹிதா ॥ (15)

'நான் செல்வம் மிக்கு உடை யவன்; நான் உயர்குலத்தில் பிறந்தவன்; எனக்குச் சரிசம மாக யார் இருப்பவன்? 'வேள்வி செய்வேன், தானம் அளிப்பேன் மகிழ்ச்சி அடைவேன்' என்று அறியாமையால் பலவாறு பிதற் றிக் கொண்டு, அறிவு மயங்கி, எல்லாம் எதுவும் தன்னால் நான் நடக்கின்றது என்று அசுர இயல்பு கொண்டோர்) நினைப்பார்கள்."

அநேகசித்தவிப்ராந்தா மோஹ
ஜால ஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி
நரகே அசுசௌ ॥ (16)

"(இவ்வாறு பிதற்றித் திரிவதால் இவர்கள்) பல எண்ணங்களால் குழப்பப்பட்டுக் குழப்படைந்த வர்கள்; மோகமெனும் வலை யிலே அகப்பட்டவர்கள்; காம போக இன்பங்களிலே பற்று மிக்கவர்கள். பாழும் நரகத்திலே வீழ்பவர்கள்."

[மேற்கூறிய நான்கு செய்யுட் களிலும் அசுர இயல்பு கொண் டோர் எத்தகைய மன இயல்பு களுடன் விளங்குவார்கள் என்ப தையும், அத்தகையோர் இறுதி யில் துன்பமே சூழ்ந்த நரக வாழ்விலே விழ்ந்து பிறவிதோ றும் அல்லலுறுவர் என்பதை யும் இறைவன் நமக்கு விளக்க மாகக் கூறுகிறார். இந்த உடம் பையே தாங்கள் பெற்ற செல் வமாகக் கருதுவதால், இவர்கள் (அசுர இயல்பு கொண்டோர்) தான், தனது எனும் மமதை யுடன் விளங்கி, எதுவும், எல் லாமே என்னால்தான் நடைபெ றுகின்றது என்று எண்ணுவர். பிற உயிர்களை அழிப்பதையும், பிற உயிர்கள் துன்புறுவதையும் கண்டு மகிழும் இவர்கள் எல் லோரையும் கொல்வேன், அழிப் பேன் என்று மமதை கொண்டு திரிவார்கள். இதுபோன்ற மக் களை, இயக்கங்களை நாம் நம் வாழ்நாளில் இன்று கண்கூ டாகவே பார்க்கின்றோம். உடல் பலமே போதும் என்று எண் ணுவர் இவர். வயது, நோய் பற்றிக் கவலைப்படா தவர்கள். தள்ளாமை வந்த போது புல் தடுக்கியும் வீழ் வர் என்பதை மறந்து வாழ் வோர் இவர். கண்ணையும், அறிவையும் மறைக்கும் காமம், மற்றும் ஆசை பற்றுக்களினால் பல தவறுகளை தொடர்ந்து மேற்கொண்டு மனக் குழப்பத்தி லேயே வாழ்வர். மோக வலை யில் பின்னப்பட்ட இவர்கள் அதுவே உலகம் என்று இருப் பர். இறுதியில் உடல் தளர்ந்து, ஆன்ம பலம் குன்றி, உள்ளம் சோர்ந்து நரகமெனும் படுகுழி யில் நிரந்தரமாக வீழ்ந்து துன் பப்படவே தங்களை ஆளாக்கிக் கொள்வர்.]

(தொடரும்)

# அறிவிப்பு

**திருமலை திருப்பதி தேவஸ்தானம் அந்தந்த மாநில இந்து சமயம் மற்றும் அறநிலையத்-துறையின்கீழ் பதிவு செய்யப்பெற்றக் கோயில்கள் பயனுறும் வகையில் கீழ்வரும் சலுகைகள் வழங்கியுள்ளது.**



கோயில்களுக்குத் தேவை யான கோயில்குடைகளை தி.தி.தேவஸ்தானம் 50% தள் ளுபடி விலையில் வழங்கி வருகிறது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட் சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் இரண்டு குடை களுக்காக ரூ. 1150/-அனுப்பு தல் வேண்டும்.



கோயில்களுக்கான ஒலிப் பெருக்கிக் கருவிகளை 50% தள்ளுபடி விலையில் தி.தி. தேவஸ்தானம் வழங்கிவரு கின்றது. இதற்கு அந் தந்த கோயிலுக்குரிய செய லாட்சித் தலைவரின் விண் ணப்பக் கடிதத்துடன் ரூ. 3370/- அனுப்புதல் வேண் டும்.

முழுவிபரங்களுக்குச் 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் முகவரி-யுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.
# திருமலையில் தங்குவசதி விவரங்கள்

## ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள்) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள் (சிறிய.. | 50-00 |
| அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை | |
| முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள் ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B | |
| (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, | |
| A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவ்வொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாதரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள(எஸ்.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர குடில்கள்(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹிலவ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு, 30 நாட்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும்.)

# பரம பதத்தை அடைவதற்கான வழி

திரு. கே. ராமஸ்வாமி அய்யங்கார் சென்னை.

கடோபநிஷத்தில் யமதர்மராஜன் நசிகேதஸுக்கு பரப்ரஹ்மத்தைப் பற்றி உபதேசிக்கிறான். அப்பொழுது பரம பதத்தை - ஸ்ரீவைகுண்டலோகத்தை அடைவதற்கு இந்த்ரியங்களை அடக்கி உபாஸனத்தைப் பண்ணவேண்டும் என்று உபதேசிக்கிறான். புலன்களை அடக்கினால்தான் நற்கதியை அடையமுடியும் என்பதை உபதேசிக்கும்போது வஸீகர்ய பரம்பரையை - ஐம்புலன்களை எவ்விதம் அடக்கவேண்டும் என்பதைக் கூறுகிறான்.

ஆத்மானம் ரதினம் வித்தி
சரீரம் ரதமேவச ।
புத்திம் து ஸாரதிர் வித்தி மந:
ப்ரக்ரஹ்யமேவச ॥

இந்திரியாணி ஹயானாஹு:
விஷயான் தேஷு கோசரான் ।

ஆத்மாவை ஒரு தேரின் சொந்தக்காரனாக நினைத்துக்கொள். சரீரத்தைத் தேராக நினைத்துக்கொள். புத்தியை ஸாரதியாக நினைத்துக்கொள். மனதைக் கடிவாளமாகவும், இந்த்ரியங்களைக் குதிரைகளாகவும், சப்தாதி விஷயங்களைத் தேரோடும் மார்க்கமாயும் நினைத்துக் கொள்'' என்று உபதேசிக்கிறான். அதாவது புத்தியாகிற ஸாரதியானவன், மனமாகிற கடிவாளங்களைப் பிடித்துக்கொண்டு இந்த்ரியங்களாகிற குதிரைகளை சப்தாதி விஷயங்களில் செல்லாமல் இழுத்து, அடக்கி நல்ல வழியில் செலுத்தினால் ஸ்ரீவைகுண்ட லோகத்தை அடையலாம். புத்தியாகிற ஸாரதி மனமாகிற கடிவாளத்தைக் கொண்டு ஐம்புலன்களை அடக்காவிட்டால் துஷ்டக் குதிரைகள் தாறுமாறாக இழுத்துச் சென்று தேரைப் பள்ளத்தில் தள்ளி யஜமானனை மரணமடையச் செய்வது போல் யஜமானனை நரகத்தை அடையச் செய்திடும் என்கிறான். ஆகையால் குதிரை போன்றிருக்கிற இந்த்ரியங்களை அடக்க வேண்டும் என்று உபதேசித்தான்.

அடுத்தபடியாக இந்த்ரியங்களை அடக்கிவிட்டால் போதாது. அதைவிட பலிஷ்டமானது ஒன்று இருக்கிறது. அதை அடக்கவேண்டும் என்று வஸீகர்ய பரம்பரையில் ப்ரதானங்களைச் சொல்கிறான்:

இந்த்ரியேப்ய: பரா ஹி அர்த்தா:
அர்த்தேப்யஸ்ச பரம் மந: ।
மனஸஸ்து பரா புத்தி: புத்தேராத்மா
மஹான் பர: ॥

மனஸ: பரம் அவ்யக்தம்
அவ்யக்தாத் புருஷ: பர: ।
புருஷான் ந பரம் கிஞ்சித் ஸா
காஷ்டா ஸா பரா கதி: ॥

இந்திரியங்களைக் காட்டிலும் அர்த்தங்கள் - சப்தாதி விஷயங்கள் சப்தம், ரூபம், கந்தம், ஸ்பர்சம், க்ராணம் ஆகியவை பலம் நிறைந்தவை. ஏனென்றால், நாம் இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு ஒரிடத்தில் ஏகாந்தமாக இருந்தாலும் சப்தாதி விஷயங்கள் நேர்பட்டால் அதை அனுபவிக்கத் தோன்றுகிறது. இதற்கு ஒரு உதாஹரணம் - சர்க்கரை வ்யாதியுள்ளவன் சர்க்கரை ஸம்பந்தமுள்ள பதார்த்தங்களைச் சாப்பிடுவதில்லை என்று ப்ரதிக்ஞை பண்ணிக்கொண்டிருந்தாலும், சர்க்கரைப் பொங்கலைச் சூடாக, நெய்யொழுகப் பார்த்தவுடன் அதைச் சிறிதேனும் ருசித்துச் சாப்பிட எண்ணுகிறான். பிறகு சாப்பிடவும் செய்கிறான். ஆகையால் இந்த்ரியங்களைக் காட்டிலும் சப்தாதி விஷயங்கள் பலம் அதிகமுள்ளவை என்று தெரிகிறது. ஆதலால் சப்தாதி விஷயங்களோடு ஸம்பந்தத்தை அறவே ஒழிக்க வேண்டும்.

அர்த்தேப்யஸ்ச பரம் மந: சப்தாதி விஷயங்களோடு ஸம்பந்தப்படாமல் ஏகாந்தமான இடத்திலிருந்தாலும், மநஸானது அவைகளை நினைத்துக்கொண்டிருக்கும். பகவத் கீதை 6-34ல் அர்ஜுனன் பகவானை நோக்கிக் கூறுகிறான்:

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண
ப்ரமாதி பலவத் த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே
வாயோரிவ ஸுதுஷ்கரம்: ॥

சஞ்சலம் - கீழே கொட்டின கடுகைப் பொறுக்கி எடுப்பது மிக சிரமமான காரியம். அது போல பல திசைகளிலும் ஓடி உருளும் மனதை ஒருமைப்

படுத்துவது எளிதன்று என்கிறான். காற்றைப் போல (வாயுவைப்போல்) அடக்கமுடியாதது மனம்.

அப்போது இந்த்ரியங்களை அடக்கியும் ஏகாந்தமான இடத்திலிருந்தாலும் ப்ரயோஜனமில்லை என்று ஏற்படுகிறது. ஆதலால் சப்தாதி விஷயங்களைக் காட்டிலும் மனது பலிஷ்டமானது என்கிறது.

மனதை நல்லவிஷயத்திலோ கெட்ட விஷயத்திலோ ஈடுபடும்படி செய்வது புத்தியாகையால் மனதைக் காட்டிலும் புத்தி பலமதிகமுள்ளது. புத்தியைத் தோன்றப் பண்ணுவது ஆத்மாவாகையால் புத்தியைக் காட்டிலும் ஆத்மா பலிஷ்டமானது. சரீரம் அதன் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களுடைய ஏற்றச் சுருக்கத்திற்கேற்ப ஆத்மாவை நல்லது கெட்டது ஆகிய காரியங்களைச் செய்யச் செய்வதால் ஆத்மாவைக் காட்டிலும் சரீரம் பலிஷ்டமானது.

அந்த சரீரத்தை நமக்குக் கொடுத்தவன் பகவானாகையால், அந்தப் பரம புருஷன் பலிஷ்டன். ஆகையால் முதலில் சொல்லப்பட்டவைகளை நாம் வஸப்படுத்திக் கொண்டிருந்தாலும் ப்ரயோஜனமில்லை. பரம புருஷனை வஸப்படுத்தினால் மற்றவைகள் எல்லாம் நம் வஸமாகிவிடும். பரம புருஷனை எப்படி வசப்படுத்துவது எனில் **"தஸ்ய ச வஸீகரணம் தச்சரணுகதிரேவ"** என்று ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்தபடி பகவானை சரணமடைந்தால் அவன் நம்மை சப்தாதி விஷயங்களில் பற்றற்றவர்களாக்கி ரக்ஷித்தருளுவான் என்று யமதர்மராஜா நசிகேதஸுக்கு உபதேசிக்கிறான். *



ஸ்ரீவெங்கடேஸ்வரர் ஸ்வாமி மூலவர்
சென்னை தியாகராயநகரில் தி.தி. தேவஸ்தான தகவல் மையத்திலுள்ள திருவேங்கடவன் திருக்கோயில்.

# பாவை பாடிய இருவர்

திரு. பா. அன்பரசு - சேலம்.

## திருப்பாவை பாடிய ஆண்டாள்

இன்றைய ஸ்ரீவில்லிப்புத்தூர் ஒரு காலத்தில் கொஞ்சம்புத்தூர் என்று அழைக்கப்பட்டு வந்தது. வேடர் குடியினர் அங்கு நீண்ட நாட்களாக வாழ்ந்து வந்தார்கள். அந்தக் குடியைச் சேர்ந்த மல்லி என்னும் பெண்ணுக்கு வில்லி, கண்டன் என்னும் இரு மகன்கள் இருந்தார்கள்.

வில்லியும் கண்டனும் ஒரு நாள் வேட்டைக்காகச் சென்றார்கள். அது ஆலமரங்கள் நிறைந்த காடு. அந்தக் காட்டிலிருந்து புலியால் கண்டன் கொல்லப்பட்டான். ஓர் ஆல மரத்தின் அடியில் மூடிய புதரில் திருமாலின் சிலையும் புதையலும் இருந்ததை வில்லி என்னும் வேடன் கண்டான். வில்லி புதையலை எடுத்து அங்கு ஒரு கோயில் கட்டினான். நகரம் புதுப்பிக்கப்பட்டதால் அந்த இடத்திற்கு புதுவை என்னும் பெயர் ஏற்பட்டது. வடவேசுரம் என்னும் பெயரும் உண்டு. வடவை-ஆலமரம், வடவேசுவரன் அடியில் கிடைத்த திருமால்.

வில்லி என்னும் வேடனால் நிர்மாணிக்கப்பட்ட ஊர் என்பதால் அந்த ஊர் வில்லிப்புத்தூர் என்று அழைக்கப்பட்டது. பிற்காலத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆனது.

வில்லிபுத்தூர் இறைவர்க்கு மாலைகள் தொடுத்துத் திருப்பணி செய்துவந்தார் விஷ்ணு சித்தர். பெரியாழ்வார், பட்டர்பிரான் என்பவை இவரது சிறப்புப் பெயர்கள். இவர் வளர்த்து வந்த துளசிச் செடியின் அடியில் ஒரு பெண்குழந்தையைக் கண்டெடுத்து வளர்த்தார். அந்தக் குழந்தையை பிற்காலத்தில் ஆண்டாள் என்று அழைக்கப்பட்டது. குழந்தையை விஷ்ணு சித்தர் கண்டெடுத்த நாள் ஆடிப்பூரம், சுக்கில பட்சம் சதுர்த்தி.

ஆண்டாள் திருமணப்பருவத்தை அடைந்தாள். வளர்ப்புத் தந்தையாகிய விஷ்ணுசித்தர் தொடுத்த மாலைகளை அவருக்குத் தெரியாமல் தான் சூடிக் கண்ணாடியில் அழகு பார்த்த பிறகு இருந்தபடியே வைத்து விடுவது அன்றாட நிகழ்ச்சி. பூமாலைகள் சூடிக்கொடுத்ததுடன் பாமாலைகளும் சூடிக்கொடுத்தாள்.

ஆயர்பாடியில் வாழும் பெண்களின் பழக்கவழக்கங்களை வைத்து அவர்கள் மார்கழி மாத நோன்பு இயற்றுவது போல் அமைந்த முப்பது பாசுரங்களையும் நாச்சியார் திருமொழி 143 பாசுரங்களையும் இயற்றினாள் ஆண்டாள்.

திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ள அரங்கநாதனிடம் மனதைப் பறிகொடுத்து, அங்கு செல்ல வேண்டும் என்னும் தனது ஆவலைத் தந்தையாரிடம் தெரியபடுத்தினாள் ஆண்டாள்.

திருமாலின் மேல் ஆண்டாள் கொண்ட காதல் மானிடர் காதல்போல் பாதியில் வெம்பி மடிவதல்ல. மேனியில் காணும் வெளிக் கவர்ச்சிகளைக் கண்டு எழும் காம உணர்வு அல்ல. உள்ளார்ந்த காதல் அது. ஆண்டாள், திருமால் மீது கொண்ட காதல் நிறைவேறுமா, மானிடப்பெண்ணுக்கும் கடவுள் என்று சொல்லப்படும் கண்ணுக்குப் புலப்படாத பொருளுக்குப் பொருந்திவருமா என்பதைச் சிந்திக்கவில்லை.

ஆண்டாளின் உள்ளக் கிளர்ச்சியை அவள் இயற்றிய நாச்சியார் திருமொழியிலும் காணலாம். மன்மதனை வேண்டி நோன்பிருந்து தன்னை திருமாலிடம் கூட்டுவிக்கும்படி வேண்டுகிறாள்.

"ஊனிடை ஆழிசங்கு உத்தமர்கென்று
உன்னித்து எழுந்த என்தட முலைகள்
மானிடவர்க்கு என்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய்"

(நாச்சியார்: தையொரு திங்கள்: 5)

என்பது மன்மதக் கடவுளுக்கு ஆண்டாளின் எச்சரிக்கை. மானிடர் ஒருவருக்கு வாழ்க்கைப்பட்டு அதனால் அவள் உயிர்துறந்தால் அந்தப்பாவம் மன்மதனையே சேரும் என்று மறைமுகமாகத் தெரிவிக்கிறாள். (சங்கு சக்

கரம் இவற்றை ஏந்திய திரு மாலின் தோள்களைத் தழுவுவ தற்காகவே என்று மார்பகங்கள் விம்மி •வளர்ந்துள்ளன. அப் படி இருக்கும்போது மானிடன் ஒருவர்க்கு நான் வாழ்க்கைப் படமாட்டேன் என்பது இதன் பொருள். மாசுப்படிந்த உடம் புடனும், உலர்ந்த தலையோ டும் வெளுத்த வாயுடனும், ஒரு வேளை மட்டும் உண்டும் மன்மதனுக்கு நோன்பிருக்கிருள் ஆண்டாள்.

விஷ்ணு சித்தர் தமது வளர்ப்பு மகளாகிய ஆண் டாளை ஒரு பல்லக்கில் ஏற் றிக்கொண்டு திருவரங்கத்திற்கு வரும்போது காவிரியின் தென் கரையில இறங்கி, கோயிலுக்கு நடநது செல்லவேண்டும் என்று நினைத்தாள். அவள் நடந்தால் அவளது கால்கள் வலிக்குமே என்று அவளை தமது மார் பில் ஏந்திக்கொண்டாராம் அரங் கநாதப்பெருமாள். இதை ஆழ் வாருக்கும் காட்டியருளினாராம் திருமால்.

அரங்கநாதரை வழிபாடு செய்துவிட்டு ஆழ்வாரும் ஆண் டாளும் வில்லிப்புத்தூருக்கு திரும்பினார்கள். பங்குனி உத்தி ரத்தில் வில்லிபுத்தூரில் அரங் கநாதர் ஆண்டாள் திருமணம் நடந்து.

ஆண்டாள் இயற்றிய நாச்சி யார் திருமொழியில் ஆறும் திரு மொழியாகிய 'வாரணம் ஆயி ரம்' என்னும் பகுதியில் அவள் கண்ட கனவை தானே கூறியி ருக்கிருள்.

ஆண்டாள் வாழ்ந்த காலம்: ஆண்டாளின் வளர்ப்புத் தந்தை விஷ்ணுசித்தர் வாழ்ந்த காலம் எதுவோ அதுவே ஆண்டாள வாழ்நத காலம் ஆகும்.

"பாண்டியன் கொண்டாட
பட்டர்பிரான் வந்தான் என்று
ஈண்டிய சங்கம் எடுத்தூத-வேண்டிய
வேதங்கள் ஓதி விரைந்து
கிழியறுத்தான்
பாதங்கள்யாமுடைய பற்று"

இது பாண்டிய பட்டர் என் பவர் பெரியாழ்வார் பாசுரங்க ளுக்கு எழுதிய தனியன் ஆகும். மதுரையைத் தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்த பாண் டிய மன்னன் ஒருவன் சம யப்பெரியோர்களின் விவாதங் களுக்கு ஏற்பாடு செய்தான். வாதங்களில் வெற்றி பெற் றோர் பொற்கிழியை (பொன் முடிப்பு) அறுத்துக்கொள்ளலாம் என்பது மன்னன் ஆணை. இப்போட்டியில் பெரியாழ்வார் வெற்றிபெற்று அந்தப் பொற்கி ழியை அறுத்துக்கொண்டார்.

இந்த வெற்றியைக்கொண்டா டும்பொருட்டு வேதங்கள் ஓதப் பட்டன. சங்குகள் முழங்கின.

இவ்வரலாற்றுச்செய்தி மேற் குறிப்பிட்ட பாடலில் காணப்ப டுகிறது.

திருக்கோட்டியூர் ஆட்சித் தலைவனாக இருந்த 'திருக் கோட்டியூர் அபிமானதுங்கன்' என்பவன் பெயரை பெரியாழ் வார் தமது பாடலில் குறிக்கி ருர். காப்பு 11)

பெரியாழ்வார் வாழ்நத காலத்தில் மதுரையை ஆட்சி செய்த பாண்டிய மன்னன் சீமா றன் சீவலப்பன் (நெடுமாறன்) என்பார் திரு. கோபிநாதராவ். இம்மன்னன் கி.பி. 0835ஆம் ஆண்டில் முடிசூடடிக் கொண் டவன்.

திருப்பாவை 13ஆம் பாசு ரததில், 'வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று' என் னும் சொற்றொடரை வானநூல் கணக்குப்படி ஆய்வு செய்த திரு. ஈ.எஸ். வரதராஜ ஐயர் இந்நாள் 18-12-0731 என்று குறிப்பிடுகிருர்.

ஆகவே ஆண்டாளின் காலம் கி.பி. 8ஆம் நூற்றுண்டு என்று கொள்வது பொருந்தும். கி.பி. 7 மற்றும் எட்டாம் நூற்றுண்டு களில் தான் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தங்கள் பதிகங் களின் கடைசிப்பாடலில் தங் கள் பெயரை முத்திரையாகப் பதிக்கும் வழக்கம் இருந் தது. (மாணிக்கவாசகர் தமது பாடல்களில் எந்தப் பதிகத்தி லும் தமது பெயரை முத்திரை யாகப் பதிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.)

## திருவெம்பாவை பாடிய மாணிக்கவாசகர்

மாணிக்கவாசகர் திருவாதவூர் என்னும் ஊரில் பிறந்த காரணத் தினால் திருவாதவூரர் என்று அழைக்கப்படுகிருர். இயற்பெ யர் மற்றும் பெற்ருேர் பெயர் கள் என்னவென்று அறிய முடியவில்லை. இவர் அருளிய நூலின் சிறப்பினால் 'மாணிக்க வாசகர்' என்னும் பெயர் இவ ருக்கு ஏற்பட்டது. பல்வேறு ஊர்களிலும் பல்வேறு சூழ் நிலைகளிலும் பாடப்பட்டவை இவரது பாடல்கள். பிற்காலத் தில் வந்த ஒருவர் அவற்றை யெல்லாம் தொகுத்து 'திருவா சகம்' என்னும் பெயர் சூட்டியி ருக்கவேண்டும்.

மாணிககவாசகர் காலத்தில் மதுரை பாண்டிய நாட்டின் தலைநகராக இருந்தது. மன் னன் அரிமர்த்தன பாண்டி யன் என்றும் வரகுணபாண்டி யன் என்றும் இருவேறு கருத் துக்கள் நிலவுகின்றன. இவ

ரது தமிழ் மற்றும் வடமொழிப் புலமையை அறிந்த பாண்டிய மன்னன் இவரை தமது அமைச்சராக நியமித்திருக்கவேண்டும்.

மனைவி மக்களுடன் இல்லறம் நடத்தியவர் இவர். அமைச்சர் பணியைச் சிறந்த முறையில் செய்துவந்த மாணிக்கவாசகர் தமது பிறவியில் இருந்து விடுபட வழிகாட்டும் சைவ சமய அடியார்களைத் தேடும் பணியிலும் ஈடுபட்டிருந்தார்.

பாண்டியநாட்டின் எல்லைப் பகுதிகளை வேற்று நாட்டு மன்னர்கள் (பல்லவர் மற்றும் சோழர்) கவர்ந்து கொண்டதாலும் வேற்று மன்னர்களின் எல்லையோரப் பகுதிகளை தனக்கு உரிமையாக்கிக் கொள்ள பாண்டியன் விரும்பி இருககவேண்டும். ஆகவே புதிய குதிரைகள் படைக்குத் தேவைப்பட்டது.

கருவூலத்திலிருந்து பணத்தை எடுத்து அமைச்சரிடம் (மாணிக்கவாசகரிடம்) தந்து புதிய குதிரைகளை வாங்கித தருமாறு ஆணையிட்டான் மன்னன்.

திருப்பெருந்துறையை ஒட்டிய கடற்கரைப் பகுதியில் இருந்த துறைமுகத்தில் (காயல் பட்டினம்?) இறக்குமதி செய்யப்பட்ட குதிரைகளை வாங்கி வரப்புறப்பட்டார் அமைச்சர்.

திருப்பெருந்துறையில் இருந்த ஒரு குருந்த மரத்தின் நிழலில் சிவபெருமான் ஒரு ஞான ஆசிரியர் வடிவத்தில் தோன்றி மாணிக்கவாசகரை ஆட்கொண்டார். குதிரகைள் வாங்குவதற்காகக் கொண்டு சென்ற பொருளை அங்கிருந்து சிவனடியார்களுக்காகவும், கோயில் கட்டவும் செலவிட்டார். துறவுக் கோலம் கொண்டார்.

குறித்தநாளில் குதிரைகள் வாங்கிவராத அமைச்சரை மதுரைக்கு அழைத்துவந்து சிறையிலிட்டுத் துன்புறுத்தினான் பாண்டியன்.

ஆவணிமூல நாளில் நரிகளையெல்லாம் குதிரைகளாக மாற்றிக்கொண்டு, தான் ஒரு குதிரையின் மேல் குதிரைப்பாகனாக அமர்ந்து மதுரை நோக்கி வந்தார், சிவபெருமான். அந்த இரவே குதிரைகளாக வந்த நரிகள் மீண்டும் நரிகளாக மாறின. ஏற்கனவே இருந்த குதிரைகளையும் துன்புறுத்தி ஊளையிட்டன.

இச்செயல் அமைச்சரின் சித்து வேலை என்று பாண்டியன் அவரை மேலும் துன்புறுத்தினான். இறுதியில் வைகை ஆற்றுக்கு அழைத்துச் சென்று நீர் இல்லாத மணல்பரப்பில் வெறுங்காலில் நிறுத்தி முதுகில் பாரமும் சுமத்தினார்கள்.

## பிட்டுக்கு மண்சுமந்தது

சிவபெருமான் அப்போது வைகை ஆற்றில் வெள்ளம் பெருகிவரச் செய்தார். பாண்டியமன்னன், ஆராயாத தனது செயலால்தான் வைகை ஆற்றில் வெள்ளம் வந்தது என்று மனம் திருந்தி இறைவனிடம் வேண்டுகிறான்.

வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட கரைகளை பழுது பார்க்க வீட்டிற்கு ஒருஆள் அனுப்ப ஆணைபிறப்பிக்கப் பட்டது. பிட்டுவிற்கும் ஒரு கிழவியின் வீட்டில் அவள் பங்குக்கு யாரும் வராத காரணத்தால் சிவபெருமானே வேலையாள் போல்வருகிறார். உதிர்ந்த பிட்டுக்களை மட்டும் கூலியாகப் பெற்றுக்கொள்வதாகக் கிழவியிடம் கூறி உதிர்ந்த பிட்டுக்களை மட்டும் உண்டு மதிய உணவுக்கும் அதையே எடுத்துச் செல்கிறான் வேலையாள் ஆனால் தனக்கென்று ஒதுக்கப்பட்ட பகுதியை அடைக்கமால் ஓரிடத்தில் படுத்துத் தூங்குகிறான்.

பாண்டியன் அடித்த அடி: ஒதுக்கப்பட்ட வேலையைச் செய்யாமல் தூங்கிக்கொண்டிருந்த வேலையாளைக் கண்டு அவன் முதுகில் கைத்தடியால் அடிக்கிறான் பாண்டியன். அந்த அடி அனைவரின் முதுகிலும் பட்டது. ஒரு கூடை மண்ணை அவன் எடுத்து உடைப்பு எடுத்த இடத்தில் கொட்ட உடைப்பும் நின்றது. மேற்குறிப்பிட்ட புராணச்செய்தி பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணத்தில் காணப்படுகிறது. இதை அறிவியல் அடிப்படையிலும் வரலாற்று அடிப்படையிலும் முழுவதுமாக ஏற்றுக் கொள்ள முடியாது.

இறைவனால் ஆட்கொள்ளப் பட்ட மாணிக்கவாசகர் சைவ சமயத்தலங்களுக்குப் போய் பரம்பொருளை பாமாலைகளால் பாடி மகிழ்ந்தார். அந்தத் தலங்கள் திருப்பெருந்துறை, தில்லை (சிதம்பரம்) உத்தரகோச மங்கை. திருவண்ணமலை, திருத்தோணி புரம், திருவாரூர்.

"நரியை குதிரையாக்கிய
நன்மையும்
ஆண்டு கொண்டருள அழகுறு
திருவடி
பாண்டியன் தனக்குப் பரிமா
விற்று"

(திருவாசகம்; கீர்த்தி:(36-38)

'மதுரைப் பெருநன் மாநகர்
இருந்து
குதிரைச் சேவகன் ஆகிய
கொள்கையும்'

(திருவாசகம்: கீர்த்தி:(44-45)

'மண் சுமந்து கூலிகொண்டு
அக்கோலால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி'

(திருவாசகம்: அம்மானை:(1)

மாணிக்கவாசகரே தமது வாக்கினால் குறிப்பிடும் மேற் குறிப்பிடப்பட்ட வரிகளை வைத்துக்கொண்டு திருவிளை யாடல் புராண ஆசிரியர் சிவ பெருமான் பிட்டுக்கு மண் சுமந்த கதையையும் எழுதியி ருக்க வேண்டும். இவ்வள வும் குறிப்பிட்ட மாணிக்கவா சகர் அரசாங்கப் பணத்தைக் கொண்டு தான் திருப்பெருந்து ரைக் கோயிலைக் கட்டியதாக வும் அடியார்களை ஆதரித்ததா கவும் எங்கும் குறிப்பிடவில்லை.

'யான் ஏதும் பிறப்பஞ்சேன்
இறப்பதனுக்கு என்கடவேன்
வானேயும் பெரிய வேண்டேன்
மண்ணுள்வான் மதித்தும் இரேன்
தேனேயும் மலர்க்கொன்றை சிவனே
எம்பெருமான் எம்
மானே உன் அருள் பெரும் நாள்
என்னென்றே வருந்துவேனே'

(திருவாசகம்: திச்சதகம்:
அறிவுறுத்தல் (12)

என்னும் பாடலில் 'மண்ணுள் வான் மதித்தும் இரேன்' என் னும் சொற்றொடர் இருவேறு பொருள்களைத் தருகிறது,

1) அரசனை மதித்து இருக் கமாட்டேன்

2) அரசன் (என்னை) மதித்தா லும் அரசவையில் இருக்கமாட் டேன்.

அரசனை மதித்து இருக்க மாட்டேன் என்பது இவருக்கும் பாண்டிய மன்னனுக்கும் ஏதோ மனக்கசப்பு இருந்ததைக் காட் டுகிறது.

இரண்டாம் பொருள் அரசன், அமைச்சர் பொறுப்பில் இரு என்று சொன்னாலும் அதை மதித்து அந்தப்பதவியில் இருக் கமாட்டேன்.

திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகருக்கு ஒரு மன மாற்றம் ஏற்பட்டது என்பது,

'திருப்பெருந்துறையுறை சிவனே
அஞ்சினேன் நாயேன் ஆண்டு
நீ அளித்த
அருளினை'

(திருவாசகம்: வாழப்பத்து: 4)

என்னும் வரிகளால் அறிய லாம். திருப்பெருந்துறையில் மருத மரநிழலில் தங்கியி ருந்த ஒரு சைவ சமயப்பெரிய வர் ஒருவரால் மாணிக்கவாசகர் ஆட்கொள்ளப்பட்டார் என்பது உண்மை. அது சிவபெருமானின் அருள் என்கிறார் மாணிக்கவாச கர்.

வாழ்க்கையில் பற்றற்றநிலை: மாணிக்கவாசகரின் பாடல்க ளில் எங்கு நோக்கினாலும் இவ்வுலக வாழ்க்கையில் அவ ருக்குப் பற்றில்லாத நிலைதான் தெரிகிறது. இதனை,

'மண்ணின்மேல் அடியேன்
வாழ்கிலேன், கண்டாய்
வருக என்று அருள்புரிவாயே'

(வாழாப்பத்து: 5)

'நாடகத்தால் உன்னடியார்போல்
நடித்து நான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றேன்

(திருச்சதகம் அறிவுறுத்தல் 1)

'உன் அருள் பெறும்நாள் என்றென்றே
வருந்துவேனே'

(திருச்சதகம்:அறிவுறுத்தல்: 12)

இவ்வரிகளாலும், இவை போன்ற இவர் நூலில் வெவ் வேறு இடங்களிலும் கூறப்ப டும் வரிகளாலும் அறியலாம்.

மாணிக்கவாசகர் காலம்: ஆண்டாளின் காலத்தை நிர் ணயிப்பது போல் மாணிக்கவா சகர் காலத்தைக் கணக்கிடுவது எளிதல்ல.

1) மறைமலையடிகள், மாணிக் கவாசகரின் காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என்கிறார். இந்தக் காலம் சங்க காலமாகும். சங்க கால இலக்கியங்களில் வேற் றுமொழிச் சொற்கள் இடம்பெ றுவது கிடையாது. 'மாதா' 'தர்ப்பணம்' போன்ற வேற்று மொழிச் சொற்கள் திருவாசகத் தில் இடம்பெற்றுள்ளன.

திருவாசகத்தில் அமைந்துள்ள பாடல்களின் வகைகள், சொல்ல மைப்பு ஆகியவை சங்க காலத் தில் இல்லை. சங்ககாலச் செய் யுள்கள் அகவல் பாக்களால் ஆகியவை. பத்து செய்யுள்க ளின் தொகுப்பாக எழுதப்படும் பதிகங்கள் கி.பி. 7 மற்றும் 8ஆம் நூற்றாண்டுகளில்தான் காணப்படுகின்றன. பதிகங்க ளின் கடைசிப்பாடலில் எழுதி யவரின் பெயரை முத்திரையா கப் பதித்து எழுதும் வழக்க மும் இந்தக் காலங்களில்தான் காணப்படுகிறது. ஆகவே மறைமலையடிகள் குறிப்பிடும் காலம் பொருந்தாது.

3) மாணிக்கவாசகர் காலத் தில் வாழ்ந்த பாண்டியமன் னர் யார் என்று தெரிந்தால் மாணிக்கவாசகர் காலம் கணிப் பது எளிது. இவர் காலத்தில் வாழ்ந்த பாண்டியமன்னன் அரி மர்த்தன பாண்டியன் என்றும் வரகுண பாண்டியன் என்றும் இருவேறு கருத்துக்கள் உள்ளன.

டி.வி. சதாசிவ பண்டாரத்தார் எழுதிய பாண்டியர் வரலாறு என்னும் நூலில் காணப்படும் பாண்டிய மன்னர்களின் பெயர் களில் அரிமர்த்தனன் என்னும் பெயரே காணப்படவில்லை.

வரகுணபாண்டியன் என்னும் பெயரை வைத்து ஆராய்வோம். இம்மன்னனின் காலம் கி.பி. 792 முதல் 835 முடிய என்று குறிப்பிடுகிறுர். டி.வி. சதாசிவ பண்டாரத்தார்.

வரகுணபாண்டியன் சிறந்த சிவபக்தனாக விளங்கியவன். மாணிக்கவாசர் இயற்றிய திருச்சிற்றம்பலக்கோவை என்னும் நூலில் இவர் வரகுண பாண்டியனது சைவப் பற்றினை,

'வரகுணனா தென்னவன் ஏத்தும்
சிற்றம்பலத்தான்' (306)
'சிற்றம்பலம் புகழும் மயலோங்கு
இருங்களியானை வரகுணன்' (327)

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

கி.பி. 10ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த பட்டினத்தார் தாம் பாடிய மும்மணிக்கோவையில் வரகுணபாண்டியனின் சைவசமயத் தொண்டுகளை 'வெள்ளை நீறு மெய்யிற் கண்டு' என்று தொடங்கி, 'பெரிய அன்பின் வரகுண தேவர்' என்று பாராட்டுகிறுர்.

இதே நூற்றுண்டில் வாழ்ந்து சைவத் திருமறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி பாடிய கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில் வரகுண பாண்டியனின் சைவத் திருப்பணியை பாராட்டியுள்ளார்.

திருடன் ஒருவனை காவலர் கட்டிக்கொண்டு வரகுணனிடம் வந்தனர். திருடனின் உடம்பில் திருநீறு பூசி இருந்த காரணத்தால் அவனது கைகளில் கட்டப்பட்டிருந்த கட்டினை அவிழ்க்கச் சொல்லி அவனை விடுதலை செய்தான். திருநீறு பூசியிருந்தால் போதும் அவன் செய்த தவறெல்லாம் மன்னிக்கப்படும் என்னும் ஆழ்ந்த எண்ணம் கொண்ட ஒரு மன்னன், குதிரைகள் வாங்கக் கொடுத்த பொருளை வைத்துக் கோயில் கட்டிய செயலைத் தவறென்று நினைப்பானா? அந்த அமைச்சரைத்தான் சிறையிலிட்டு அவமானப்படுத்தி வைகையின் வரண்ட மணலில் வெறுங்காலில் நிற்க வைத்திருப்பானோ?

ஆகவே வரகுண பாண்டியனின் பேரனான இரண்டாம் வரகுணன் காலத்தில் தான் மாணிக்கவாசகர் வாழ்ந்திருக்க வேண்டும். இவன் காலத்தில் தான் தனது பாட்டனாரைவிட அதிகமான போர்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. போர்களுக்காக குதிரைகள் வாங்க வேண்டிய தேவையும் இருந்திருக்கும். இவன் முடிசூட்டிக்கொண்ட ஆண்டு 862. இந்த ஆண்டிற்குப் பிறகு தான் குதிரைகள் வாங்க தனது அமைச்சரை பொருள் கொடுத்து அனுப்பி இருக்கவேண்டும்.

போர்த்தளவாடம், குதிரைகள் வாங்கும் பணம் வீண் என்று நினைத்து மாணிக்கவாசகர் குதிரைகள் வாங்கக் கொடுத்த பணத்தைக் கொண்டு சைவ சமய அடியார்களைப் பேணவும், சிவபெருமானுக்குத் திருப்பெருந்துறையில் கோயில் கட்டவும் செய்திருக்கலாம்.

ஆகவே மாணிக்கவாசகரின் காலம் கி.பி. எட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதி என்று ஆகிறது.

அருபத்து மூன்று சிவனடியார்களின் வரலாற்றை எழுதிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும், திருத்தொண்டத்தொகை எழுதிய நம்பியாண்டார் நம்பியும் (இராசராசன் அரசவையில் இருந்தவர்) மாணிக்கவாசரின் பெயரைக்கூடக் குறிப்பிடவில்லை.

இராசராச சோழனின் காலம் கி.பி. 0975-1047 இவன் வேண்டுகோளுக்கு இணங்க, நம்பியாண்டார் நம்பி என்னும் சைவ சமயப் பெரியார் சைவ சமய நூல்களை 11 திருமுறைகளாகத் தொகுத்தார். இதில் மாணிக்கவாசகர் எழுதிய திருவாசகமும், திருக்கோவையாரும் சேர்க்கப்படவில்லை.

கி.பி. 12ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த சேக்கிழார் எழுதிய பெரிய புராணத்தில் நாயன்மார்கள் 63 பேர் தொகையடியார்கள் ஒன்பது பேர் ஆக 72 பேரின் வரலாறுகள் மட்டுமே காணப்படுகின்றன. மாணிக்கவாசகரின் வரலாறு எதிலும் இடம்பெறுத காரணம் விளங்கவில்லை.

ஆண்டாளின் காலம்: கி.பி. 835க்குப் பிறகு. மாணிக்கவாசகரின் காலம்: கி.பி. 862க்குப் பிறகு. இருவரும் சைவசமய வாக்குவாதங்கள் நிரம்பிய காலத்தில் வாழ்ந்தவர்கள் என்பதில் ஐயமில்லை.

முதல் வரகுணபாண்டியனின் பெயரைக் குறிப்பிட்ட நம்பியாண்டார்நம்பி மாணிக்கவாசகரின் பெயரைக் குறிப்பிடவில்லை. 'மாதா' (போற்றித் திரு அகவல்) 'தர்ப்பணம்' (கீர்த்தித் திரு அகவல்) போன்ற வேற்றுமொழிச் சொற்கள் மாணிக்கவாசகர் பாடல்களில் காணப்படுவதாலும் இவர் காலத்தை கி.பி. 10ஆம் நூற்றுண்டுகளுக்குப் பிறகு கொண்டுசெல்லவும் கால ஆராய்ச்சி இடம் தருகிறது.

சூடிக்கொடுத்த ஆண்டாள் தன்னை ஆயர்பாடியைச் சேர்ந்த ஒரு பெண்ணாக நினைத்து மார்கழி நோன்பு நோற்கிறாள். ஒரு நாளைக்கு ஒரு பாடல் வீதம் மூப்பது பாடல்கள் கொண்டது திருப்பாவை. 'ஏல் ஓர் எம்பாவை' என்று பாடலில் கடைசி வரி முடியும்.

மாணிக்கவாசரர் இயற்றிய திருவெம்பாவையில் இருபது பாடல்கள் மட்டுமே காணப்படுகின்றன. மீதி பத்துப் பாடல்கள் அவர் எழுதவில்லையா அல்லது எழுதப்பட்டு நமக்குக் கிடைக்காமல் போய்விட்டதா என்பது தெரியவில்லை. திருவெம்பாவை இருபது பாடல்களும் திருப்பள்ளியெழுச்சி பத்துப் பாடல்களும் ஆக மொத்தம் முப்பது மார்கழி மாதம் சைவ சமயத்தவர்களால் பாடப்படுகிறது.

ஆண்டாள் எவ்வாறு கண்ணனை மட்டுமே நினைத்துத் திருப்பாவை பாடினாளோ அதுபோல் மாணிக்கவாசகர் சிவபெருமானை மட்டுமே நினைத்துப் பாடியிருக்கிறார். சமயச் சடங்குகளையெல்லாம் நீக்கி, இருவர் பாடல்களிலும் காணப்படும் பக்திச் சுவையையும், அக்காலப் பழக்க வழக்கங்களையும் தமிழ்ச் சுவையையும் அறியும் நோக்கத்துடன் படிப்பதே பயனுடையது. எவர் முன்பு வாழ்ந்தார் எவர் பின்பு வாழ்ந்தார்? என்பது முக்கியமல்ல.

ஆண்டாளின் திருப்பாவை முப்பது பாசுரங்கள் மற்றும் நாச்சியாரின் திருமொழி ஒருநூற்று நாற்பத்து மூன்று பாசுரங்களில் சிறப்பை உணர்ந்து தெலுங்கு மன்னர் கிருஷ்ண தேவராயர் ஆண்டாளின் சிறப்பை விளக்கும் 'ஆமுக்த மால்யத' என்னும் நூலை எழுதினார். மாணிக்கவாசகரின் திருவாசகத்தை ஜி.யு. போப் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்தார். இவையே இருவர் இலக்கியங்களின் சிறப்பை விளக்கப் போதிய சான்றாகும்.

* * *

## ஸ்ரீ கிருஷ்ணர் புகட்டிய பாடம்!

[மகாபாரதக் கதை]

பஞ்ச பாண்டவர்கள் கானகத்தில் வசித்துவந்தபோது ஒருமுறை பாஞ்சாலி, அர்ஜுனன், பீமன் மூவருமே தாங்கள் தான் கிருஷ்ணபக்தியில் சிறந்தவர்கள் தங்களை மிஞ்சயாருமே இல்லை என அகம்பாவம் கொண்டனர். மூவருமே இவ்விஷயத்திலே போட்டி போட்டனர். பார்த்தார் கிருஷ்ணர். இவர்களுக்கு பாடம் ஒன்று புகட்ட எண்ணங்கொண்டார். ஒருநாள் காலை, ஒரு பெரிய தவலையை தண்ணீர் நிரப்பி செங்கல் அடுப்பில் பீமன் தூக்கி வைத்தான். அடுப்பிலே, மரப்பட்டைகள், விறகுகள், சுள்ளிகள் என்று போட்டு தீ மூட்டினான். அடுப்பு திகுதிகு என எரியத் தொடங்கியது. அரைமணி ஆகியிருக்கும். தண்ணீரைத் தொட்டுப்பார்த்தால், தண்ணீர் 'ஜில்' என்றிருந்தது. துளிகூட சுடவேயில்லை.

"இது என்ன விந்தை? அடுப்போ பயங்கரமாக எரிகிறது. இவ்வளவு நேரமாகியும் நீர் சுடாமல் இருப்பது எப்படி என மூவருமே வியந்து, திகைத்து நின்றனர். அப்போது அங்கே வந்த ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா, "என்ன மூவருமே பிரமிக்கின்றீர்களே? என்ன சமாச்சாரம்" என ஒன்றுமே தெரியாதவர் போல் கேட்டார். விஷயம் தெரிந்தவுடன் "பீமா, அந்தத் தண்ணீர் அனைத்தையும் கீழே கொட்டு" கண்ணனின் கட்டளைப்படி தவலைத்தண்ணீர் சாய்க்கப்பட, அதிலிருந்து ஒரு பெரிய தவளையொன்று எகிறிக்குதித்து தரையில் விழுந்து, பின் குதித்து ஓடிவிட்டது. மூவருமே திகைத்தனர். "பார்த்தீர்களா, இந்தத் தவளையானது, 'கிருஷ்ணா கிருஷ்ணா' என்று என்பெயரை ஜபித்துக் கொண்டிருந்தது. நான்தான் அதனை, நீர் சுடாமல் இருக்கவைத்துக் காப்பாற்றினேன். இப்போது புரிந்து கொண்டீர்களா? எனக்குப் பகைவனோ, அன்பனோ, உயர்ந்ததோ, தாழ்ந்ததோ எதுவும் கிடையாது யார் என்னை அழைத்தாலும் ஓடோடிச் சென்று காப்பாற்றுவேன். என்னை நம்பி, பக்தி செலுத்தும் எல்லோரும் என் பக்தர்கள்தான். அவர்கள் மேல் நான் சமமான கருணைதான் காட்டுவேன். உயர்வு தாழ்வு என்பது எனக்குக்கிடையவே கிடையாது" என்றார் கிருஷ்ணர்.

மூவருமே வெட்கித் தலைகுனிந்து, காலில் விழுந்து கண்ணனிடம் மன்னிப்புக் கேட்டனர்.

திரு. வஸந்தா வேணுகோபால் - சென்னை.

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர், மா. வரதராஜன் - திருப்பதி.

## பு

புதுக்கும்பீடு - புதிதாக உண்டான பக்தி
புதுக்கோமுற்றவர் - புதிய ராஜாக்கள்
புதுப்புனல் - புதுவெள்ளம்
புதுவவி - புதிய ஹவிஸ்ஸு
புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்
புதைத்துப் பார்க்கவொண்ணாது - சில இடங்களில் நீரை அடக்கமுடியாது
புந்தி - மனது; புத்தி; புதன்; வெளிநிலம்
புமடக்கி - சுடுகாட்டுக்காரன்; சொல்லத்தகாதவன்
புய்த்தல் - இழுத்தல்; வாங்குதலாய் விடுகையும்; சேர்த்தல்
புயக்கற்றது - பசையற்றது
புயக்கவடியிட்டு - மெள்ளவடியிட்டு
புயக்கு - பசுமை
புயல்கை - மேகம் போல் என்றும் ஒக்கக்குறைவரக் கொடுக்கும் கை
புயல் மழை - தூறலும் துளியுமான மேகம். புயல்-மழை, மழை-மேகம், மழை பெய்யும் மேகம்
புயற்காலம் - கார்காலம்
புரண்டிட்டோடி - புரண்டு புரண்டு ஓடி
புரணி - சப்பரை; ஸாரமற்றது
புரந்தரன் - இந்திரன்
புரக்கை - பலிக்கை
புரவர் - தலையாரி
புரத்தல் - காத்தல்
புரவாளன் - நல்ல க்ஷேத்ரத்தை உடையவன்
புரவிமுகம் செய்தல் - குதிரைமுகம் போலே தலைவணங்குதல்
புரளுகை - உருளுகையாய் அழிவு என்றபடி
புராணபந்தம் - புராணத்தில் சம்பந்தத்தைப் பெற்றிருக்கை
புராணர் - பழையவர்
புரி - வலம்புரி; பின்னுகை; ஆச்ரயி-அடை, கிட்டு
புரிகுழல் - அலைந்து குலைந்து இராமல் அழகாயுள்ள மயிர்முடி
புரிகை - செயல்-ஒடுங்குகை; மேலே பெருத்து கீழே ஒடுங்கியுள்ள சங்கு
புரிசடையம் புண்ணியன் - பின்னின, சடை கட்டி (தவம் செய்து) சம்பாதித்த அழகிய புண்ணியத்தையுடையவன் சிவன்
புரிசை - மதிள்; பட்டிணம்
புரிந்தது - கற்றது; பழகியது
புரிந்திருந்தேன் - விரும்பியிருந்தேன்
புரிந்துமலரிடுதல் - ஆதரித்து மலரிடுதல்
புரிப்பிக்கை - திரும்பப்பண்ணுகை
புரிநூல் - திருயஜ்ஞோபவீதம்; பூணூல்
புரிப்புடைத்தான மதிள் - கோணமாக வளைந்த மதிள்
புரிவது - கொடுப்பது
புரிவார் - முயலுவார்
புரிவுடைமை - விருப்பமுடைமை; நட்புடைமை
புரியில் - சாய்ந்தால்; திரும்பினால்
புருடோத்தமம் - புருஷோத்தம க்ஷேத்ரம்
புருவவட்டம் - புருவ வளைவு
புரை - உவமை
புரைபுரையால் - இடந்தோறும்; அகந்தோறும்
புரைகிற - முளைக்கிற
புரையறுதியாலே - பொய்யில்லாமையாலே மெய்ப்பாட்டாலே
புரையற்றிருக்கை - புரை-பொய், மெய்யாய் இருத்தல்; இருட்டுப் புரை-இருட்டுப் பிரதேசம், ஊட்டுப் புரை-உணவு போடும் இடம். மலையாளத்தில் உள்ள அன்னசத்திரங்களுக்கு இப்படிப்பெயர்
புரையும் - போன்ற
புரைவாய் - இடம்
புல்குகை - கட்டிக்கொள்கை; ஊடுகை
புல்குமனை - தழுவுமணை
புல்லல் - புணைதல்
புல்லறிவு - விபரீத ஞானம்; அறிவின்மை
புல்லி - பற்றி, புல்கி, தழுவி, அளைந்து
புல்லிலை - புல்கப்பட்ட இலை; மூங்கில் இலை பனைஓலை
புல்லென்றொழிந்தன - குறையாக நினைத்தொழிந்தன
புலக்குண்டலம் - விரும்பிக்காணப்படும் படி அழகான குண்டலம். புலன்-இந்திரயம், அத்தை

| | | | |
|---|---|---|---|
| | அபகரிக்கும் குண்டலம்-காதணி | புலமங்கைகுல் வேந்தன் | - புலப்படும் மங்கை, அழகான திருமங்கை என்னும் நாடு, அதுக்கு வேந்தரான திருமங்கையாழ்வார் |
| புலக்கனவு | - புன்மை | புலமன்னுவடம்புனைகொங்கை | - எம்பெருமானுடைய எல்லா இந்திரியங்களும் மன்னும் படியாய் ஆபரணம் புனைந்த கொங்கை |
| புலங்கள் | - பொய்கைகள் | புலமனு மலர் | - கண்டாருடைய புலன்கள் மன்னும்படியான மலர் |
| புலங்கெழுபொருநீர் | - புலம் - விளைநிலம் அல்லது புலன்கள்-கண்டாருடைய இந்திரியங்கள், கெழு-பிணியுண்ணும்படி, பொரு-தன்னில் பொரும், நீர், நீர்வெள்ளம். | புலமை | - தோத்திரம்; ஸ்துதி; அறிவு |
| புலந்தோய் தழைப்பந்தர் | - புலன்-இந்திரியம், தோய்கை, அபகரிக்கை, இந்திரியங்களை அபகரிக்கும் அழகான தழைப்பந்தர், புலம்-பூமி, தோய்கை, தொடுகை, பூமியைத்தொடும்படியாக வளைந்த தழைப்பந்தர். | புலமைபாடினான் | - கவி பாடினான் |
| | | புலர் | - புலத்திலே உள்ளவர் |
| | | புலர்த்த | - உலர்த்த |
| | | புலரி | - விடிவோரை; பூமி; பிரிவு; தூக்கம்; ஆனைத்தொழில்; நாள்; |
| புலம்பட | - கண்ணுக்கு இலக்காக | புலராமே | - சருகாய்ப்போகாமே |
| புலத்தல் | - நீத்தல், அறிவுறுத்தல், நிரைத்தல் | புலவழி | - இந்திரிய மார்க்கம் |
| | | புலவல் | - வெறுப்பு; புலால் |
| புலத்தி | - வண்ணத்தி | புலவாநிரை | - அழகான பசுக்கூட்டம் |
| புலந்து | - வண்டு | புலவி | - புலவனுக்குப் பெண்பால்; பெரிய பிராட்டியார்; துக்கம் |
| புலம்பரந்து | - புலம்-வெளிநிலம், அது உள்ள இடமெங்கும் பரந்து | புலவுகானல் | - புலவு, பிரிவாய் அதுக்குள்ள நெய்தல் நிலம் பிரிந்தார் இரங்கும் நெய்தல் |
| புலம்புரிநூலவன் | - பார்ப்பவர்கள் இந்திரியங்களைத் தன் பக்கலில் துவக்குகைக்கு ஈடான பூணூலை அணிந்தவன் | புலன்கழல் | - அழகான திருவடி |
| புலமங்கை | - ஸ்ரீபூமிப்பிராட்டி | | |

(தொடரும்)

# இருமுறை இறைவணக்கம்

இரவில் நாம் நினைவிழந்த மனநிலையில் (உறக்கத்தில் கிடப்போம். எதிர்பாராது திடீர் என்று வரும் ஆபத்துக்களிலிருந்து நாம் நம்மை அப்பொழுது காத்துக் கொள்ள முடியாது. இந்த மனநிலையில் நம் உயிரே போகின்ற கொடியநிலை ஏற்பட்டாலும் ஏற்படக்கூடும். இந்த துன்பங்களிலிருந்து உணர்விழந்தநிலையிலும் நம்மைக் காப்பது அந்தப் பேரருளாம் இறைவன் தான். எனவே தான் வைகறையில் நாம் கண்விழித்தவுடன், முந்திய இரவு நம்மைக் காத்து அருளிய தெய்வத்திற்கு நன்றியைச் செலுத்துவது நமது தலையாயக் கடமை ஆகிறது. இன்று டீ வாங்கித்தந்த நண்பனுக்கும், வெற்றிலைப்பாக்குத் தந்த தோழனுக்கும் "நன்றி" சொல்லமட்டுமே இன்றைய சமுதாயப் பழக்கவழக்கங்கள் நமக்குப் பாடம் கற்றுத்தந்துள்ளன. நம் வாழ்வைக் காத்து உயிரமுதம் ஊட்டி வளர்க்கின்ற இறைவனுக்கு "உடல்குழைய,என்பெலாம் நெக்குருக விழி நீர்கள் ஊற்றெனப் பெருக" உயர்ந்த எண்ணங்களால் தகுந்த சொற்கள் மூலம் நாம் செலுத்தும் காலை வழிபாடு உயர்ந்தது.

கடமைகள் எல்லாம் முடித்து மாலையில் மீண்டும் இறைவனை வணங்க வேண்டும். நாள் முழுவதும் நாம் செய்த செயல்களை அந்நேரத்தில் நம் நினைவின் விளிம்பிற்குக் கொண்டுவந்து திரும்பிப் பார்ப்போம். அப்பொழுது வணங்குவோம். "பரம்பொருளே! நாள்முழுவதும் கடமைகளுக்கிடையே நாங்கள் அலைந்து திரிந்தபோது எங்களுடன் வந்து, தவறான வழிகளிலிருந்த எங்களைக் காத்து வழிகாட்டிய பெருந்தெய்வமே! உனக்கு நன்றி செலுத்துகிறோம்.

திரு. க. சுகுமாரன் - திருவாரூர்.

# சிந்தைநோய் தீரும் மருந்து

திரு. எஸ்.பி. சம்பத் - குரோம்பேட்டை.

தயரத சக்ரவர்த்தி நான்முகனை ஒத்த வசிட்ட மாமுனியைத் தொழுது, "அறுபதினாயிரம் ஆண்டுகள் இவ்வுலகை அறத்தினின்று இம்மியும் வழுவாது இனிது அரசு பரிபாலனம் செய்தேன்; எனக்குப் பிறகு, இவ்வையகம் நன்கு இயங்க ஒருவாரிசு இல்லாமல் போனது தவிர, வேறு குறையும் இல்லை என்றான்"

அம்மாற்றம் கேட்ட வசிட்டர் தன் மனக்கண்முன் அன்று அசுரர்கள் பாற்கடலை (வியூகநிலை) அடைந்து அங்கே, "மலை என விழிதுயில்வளரும்" மாமுகிலிடம் தங்களுக்கு அரக்கர்களால் ஏற்படும் கொடுமைகளைக் குறித்து முறையிடவும், அதற்கு கொலை தொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பேன்" என்று அனந்தன் மீமிசை கண் துயிலும் வள்ளல் அமரர்களுக்கு கொடுத்த சத்தியவாக்கு நினைவுக்குவந்தது. அவ்வாறே ஸ்ரீமந் நாராயணன் இருசுடர் இருபுறத்தேந்தி திருவொடு பொலிய கருடன் மேல் தோன்றி அமரர்கள் சரணுகதிக்கு செவிமடுத்து, தான் தயரதன் மதலையாய் தாரணியில் அவதரிக்கப் போகிறேன் என்றும் மற்றவர்கள் யார் யார் என்று தன் அவதாரத்திற்கு உறுதுணையாய் பிறக்கப்போகிறூர்கள் என்பதையும் கூறி விண்ணில் மறைந்தார் என்பதையும் முனிபுங்கவரான வசிட்டர் இதயத்து எண்ணி, சக்ரவர்த்தியிடம் புதல்வரை அளிக்கும் புனித வேள்வி ஒன்று செய்தால் மகப்பேறு இல்லை என்ற சிந்தை நோய் தீரும் என உரைத்தார்.

மன்னர் மன்னன் உவகைத்தேனுண்டு உளம் பூரித்து அந்த வேள்விக்கு ஆவன யாது? என வினவ அதற்கு அருந்தவமுனி ஒரு உபாயத்தை விளக்கினார். "காசியபரிஷியின் மைந்தனான விபாண்டகர் என்ற தவச்சிரேஷ்டர் உள்ளார் என்றும், அவருக்கு நான்முகனை ஒத்த தேசுடைய ஒருமகன் உண்டென்றும் அவருடைய திருமுகத்தில் இயற்கைக்கு மாருக அழகூட்டும் ஒரு கொம்பு உண்டென்றும் அவரை ரிஸ்யஸ்ருங்கர் (தீந்தமிழில் கலைக்கோட்டுமுனி) என்றும் அழைக்கப்படுவார் என்ருர். அவர் தன் குடில் சுற்றுப்புற பொழில் தவிற யாதும் அறியார் மான்களை அறிவார், மான் விழி மாதரை அறியார், நீர் தங்கும் வயல்களில் துள்ளும் கயல்கண் அறிவார், கயல்கண் மாதரை அறியார்; மொத்தத்தில் மண்ணில் வாழும் மாந்தர்களை விலங்குகள் என்று எண்ணும் மனத்தர்; மேலும் பிரம்மசர்ய விரதத்தைப் பூண்ட மாதவத்தர் என்றும் மொழிந்து அவரை தருவிக்க வேண்டும் என்ருர். தயரதன் அந்த உன்னத முனிவரன் எங்குளன் என மேலும் வினவ, வசிட்டர் அவர் வரலாற்றைக் கூறலுற்ருர். "மனு குலத்தில் உதித்த உத்தான பாதன் என்ற ஒரு அரசன் தன் மக்களிடம் அன்போடு இனிதாக ஆண்டுவந்தான், இருந்தும் அவனுடைய நாட்டில் ஒரு சமயம் மின்னலுடன்கூடிய முகிற் கூட்டங்களின்றி வரட்சி ஏற்பட்டு மாந்தர் அவதியுற்றனர். வேதம் ஓதும் முனிவர்கள் பலரை அழைத்து தானங்கள் பல புரிந்தும் வருணனின் வான்கண்கள் திறக்காமல் போகவும் அல்லல் தீர மேலும் யாது செய்ய வேண்டும் என முனிசிரேஷ்டர்களை வினவ, அவர்கள் ஒருமனதாக கலைக்கோட்டு முனிவன் நம் தேசத்தில் அடிவைத்தால் வான் முழங்கி மழைபெய்யும் என்றுரைத்தனர்" என்று செப்பவும் அந்த அருந்தவத்தானைக் கொணரும் வகை புரியாமல் அரசன் திகைத்து நிற்க, அவ்வமயம் அருகிலிருந்து ஒளிமயமான நெற்றிகருமையான அகண்ட கண்கள், அடர்த்தியான அளகாபாரம், பவளத்தை ஒத்த இதழ்கள் அதில் தவழும் குருநகையும் கனமான மார்பகத்தோடு கூடிய இளம் பெண்கள் தாங்களாகவே முன்வந்து "யாம் ஏகி அருந்தவத்தவனைக் கொணர்தும்" என்று மாற்றம் உரைத்து வணங்கி நின்றனர். அரசன் அகமகிழ்ந்து அந்தப் பூவையர்களைச் செல்லும்படி உத்தரவிட அவர்களும் ஆனந்தத்தோடு இரதத்தில் ஏறி, கலைக்கோட்டு முனிவர்வாழும் பிரதேசத்திற்குச் சென்றனர். முனிக்

குமரன் வைகும் குடில் அருகாமையில் பன்னசாலை ஒன்று சமைத்து ஆங்கே தங்கியிருந்தனர், ' விபாண்டகர் வெளியில் சென்றிருந்த சமயம் பார்த்து முனிவரின் இல்லம் புகுந்து அவரை தொழுதனர்; அந்த பால முனிவர் வந்த விருந்தினரை உபசரித்து அனுப்பினார்; சிலநாட்கள் சென்றபின் அருந்தவனைக் காணச்செல்லும்தோறும் கதலி, மாங்கனி, பலாக்கனி என பலவகையான பழங்களை வைத்து அருந்தும்படி செய்தனர், இவ்விதம் பல பகல்கள் கழிந்த பின் மாசற்ற மாதவனை தாங்கள் தங்கும் இருப்பிடம் வரும்படி தொழுதலும் அதற்கிசைந்து அவரும் உடன் தொடர்ந்தார்.

வளநகர் முனிவரன் வருமுன்,
வானவன்
களன் அமர்கடு எனக்கருகி,
வான்முகில்
'சள சள' என மழைதாரை
கான்றன
குளனொடு நதிகள் தம்
குறைகள் தீரவே
(கம்பராமாயணம்)
(திருஅவதாரப்படலம்)

முனிவர் வருகையினால் குறைகள் நீங்க குளங்களும் நதிகளும் மழையினால் நிரம்பப்பட்டது. அரசன், கலைக்கோட்டு முனிவர் கொவ்வைச் செவ்வாய் மகளிருடன் வருகை தருகிறுர் என்று ஊகித்து சில தூரம் சேனையுடன் எதிர்கொண்டு அழைப்பதற்குச் செல்லவும், குழலியர் மத்தியில் மாதவனைக் கண்டு களிப்புற்று கண்கள் நீர் சொறிய பாதங்களில் வீழ்ந்து, "நான் வாழ்ந்தேன்" என்றும் மாதர்களை நோக்கி "எனது இடர் தீர்ந்தது" என்று மொழிந்தான்; ஆனால் முனிவரன் ஏதோ ஏமாற்றப்பட்டதாகக் கருதி முனிவுற்றுன்; அரசன் மாதவத்தோனை இறைஞ்சி இதில் யாதொரு கைதவமுமில்லை என்றுரைத்ததும் கலைக்கோட்டு முனிவர் கோபம் தணிந்து அருள் சுரந்து தேரில் அரசனுடன் திரு மாளிகைக்குள் நுழைந்து அரியாசனத்தில் அமர்த்தப்பட்டார்; பிறகு உபசாரங்கள் பல ஆற்றி கைம்மாருக தன் மகள் சாந்தையை அவருக்கு முறைப்படி திருமணம் செய்வித்தார்" என்ற விருத்தாந்தத்தை முடித்தார்.

இந்த வரலாற்றை வசிட்டரிடம் கேட்டுக்கொண்டுவந்த தயரத சக்ரவர்த்தி உடனே சுமந்திரன் முதல் ஏனைய அமைச்சர்கள் தொழ உத்தானபாத அரசன் நாட்டை அடையவும், கோவேந்தர் வருகையை அரசனிடம் சென்று ஒற்றர் கூற, எதிர் வந்து காதல் தழைத்து ஓங்கத் தழுவினன், தான் வந்த காரியத்தை தயரதன் செப்பவும், அவ்வரசன், "அருந்தவனைக் கொணர்ந்து "அயோத்தியில் விடுப்பென்" என்று உரைத்தலும் அயோத்தி மன்னன் தன்னாட்டுக்குச் சென்றுன். அரசன் வேத விற்பன்னனான முனிவரை அணுகி தயரதனின் விருப்பத்தை அறைதலோடும், தேரை கொணரச்சொல்லி மனைவி சாந்தையுடன் அயோத்தி அடைந்தனர். அரச கோமகன் முதிர்ந்த மாதவமுடைய முனிவரைக் கண்களால் கண்டு அவர் தாள்களில் படர்கின்ற கொழுகொம்பு போல் வீழ்ந்தனன். தன்னை அழைத்த காரணம் யாது என வினவ அரசன் தனக்குப் பின் இந்த தொல் குலத்துக்கு ஒருமைந்தன் இல்லாமையால் ஒரு வேள்வி இயற்ற வேண்டும் என விளம்பலும், உபகரணங்கள் யாவையும் கொணர்ந்து பன்னிரு திங்கள் யாகத்தை சிறப்பாக நடத்தி கலைக்கோட்டு முனிவரும் அத்தழலின் நடுவே அருள் ஆகுதி வழங்கினார். அக்னியிலிருந்து ஒரு தங்கத்தாலான வட்டிலில் மதுரமான பிண்டத்தை ஏந்திய பூதம் ஒன்று எழுந்து வைத்துச் சென்றது. ' மாமுனி பணித்திட, பிரசாதத்தை அரசர்க்கரசன் தன் மனைவியர்களான கோசலை, கைகேயி சுமித்திரைக்கு முறையே ஈந்தனன்.

கலைக்கோட்டு முனிவர் திருப்பாதங்களை தொழுது "உய்ந்தனென்" என்று நன்றியை தெரிவிக்கவும். வந்த முனிவர் இருப்பிடம் மீண்டார். மூன்று தெரிவையர்களும் சிறிது நாள் கழிந்து கருவுற்று மதியமோடு ஒப்பத்தோன்றினர்.

தயரதன் சிந்தைநோய்க்கு மருந்தாக அமைந்தது பூதம் கொணர்ந்த அமுதமாகும். அந்த நோய் தீர்க்கும் மருத்துவனானார், கலைக்கோட்டு முனிவர்.

# சிவராத்திரி வழிபாடு

திரு. டி.டி. செல்வம் - ஏகாம்பரகுப்பம்.

வருடம் முழுவதும் பகுள சதுர்தசியில் சிவராத்திரி ஆனால் மாசி-பங்குனி திங்கள் இடையிலான பகுள சதுர்த்தசி சிவராத்திரி மிக சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

"மாக பால்குணயோர்மத்யே
கிருஷ்ணபக்ஷே சதுர்தசி
சிவராத்திரி ரிதி க்யாதா சர்வ
யக்னோத்தமமோத்தம:"

மாசி மாத கிருஷ்ணபட்ச சதுர்த்தியை மட்டுமே நாம் மஹா சிவராத்ரி என அழைக்கிறோம். அது ஈசனுக்கு மிக பிடித்தமானது என சொல்லப்படுகிறது.

கலியுகத்தில் இந்த உலகம் உய்யவேண்டுமெனக் கருதி ஈசன் லிங்கவடிவம் கொண்டதாக அதுவும் நல்லிரவில் எழுந்தருளியதாகவும் கூறப்படுகிறது.

லிங்கம் என்பதற்கு தோற்றங்கள் ஒடுக்கப்படுவது என்று பொருள். அந்த ஒடுக்கமற்ற தோற்றங்கள் வெளிப்படையாவது அருள்ஒளிபெறுவதானால் மட்டுமே ஆகும்.

மார்கழி மாதம் முதல் மாசி மாதம் வரை மூடுபனியால் மூடிகிடக்கும் யாவும் பங்குனியில் இப்பனி மறைந்து இலை உதிர் காலம் தோற்றமாகும். அதாவது நம்மில் ஒளிந்து கிடக்கும் அனைத்து தீய குணங்கள் யாவும் விலகி மீண்டும் நற்குணங்கள் புலனாகும். அதாவது சிவன் திருவடியை பணிவதால் என்பது இதன் கருத்து.

தாங்கி இருபது தோளுந்தடவரை
ஒங்க எடுத்தவர் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்தமரா-
வென்றழைத்தபின்
நீங்கா அருள் செய்தான் நில்
மலன்தானே.



காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம், டம்பம், தர்ப்பம், அசூசை, இரீஷை என்ற பத்து குணங்களும், ஞானேந்திரியம், கர்மேந்திரியம் என்ற பத்து இந்திரியங்களில் புறப்படுகின்ற இருபதும், நாம் விட்டொழிந்தால் சிவனது அருள் கிடைக்கும் என்பதாகும். ஆகையால் சிவராத்திரியன்று நாம் நம்மில் உள்ள மலங்களை நீக்கி சிவன் அடியை பணிந்தால் அவர் அருள் கிட்டுமென நமக்கு மாசி-பங்குனி மாத இடையிலான சிவராத்திரி உணர்த்துகிறது.

"காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்" என்று திருமூலர் பாடியுள்ளார். சிருஷ்டியின் காரணமாகிய சிவபெருமான் அன்பினால் எல்லாப்பொருளோடு கலந்திருப்பவன். அதாவது இயற்கையில் காய்கனிகள் அனைத்தும் நிறைந்து காணப்படுவது இந்த மாசி பங்குனியில்தான்.

சிவராத்திரியன்று விடியற்காலையில் எழுந்து மங்கள நீராடி விரத சங்கல்பம் சொல்லிக்கொண்டு மௌனத்துடன் அனைத்தையும் ஒடுக்கி, உண்ணுநோன்பிருந்து இரவு மீண்டும் நீராடி தூய்மையுடன் கணபதி பூஜை செய்து முறையாக ஒவ்வொரு நாழிகையும் வில்வ இலையில் சிவனை பூஜித்து அபிஷேகம் செய்து, நைவேத்தியத்துடன் ஆரத்தி கொடுத்து, இரவு முழுவதும் கண்விழித்து, மறுநாள் காலை லிங்க வழிபாடு செய்து, அன்னதானம் செய்வது வழக்கம்.

இந்த விரதம் அனைத்து பாவங்களையும் அழிக்கும் வலிமை பெற்றுள்ளது என்கிறார்கள் பெரியோர்கள்.

"சிவராத்திரி சமம், நாஸ்தி விரதம்
பாப நஷ்யாவஹம்
யத்க்ருத்வா சர்வ பாபேப்யோமுச்யதே
நரத்திர சம்சயா:"

சிவராத்திரி அன்று விளக்குகள் வரிசையாக வீட்டு முன்வைத்து ஏற்றப்படுகிறது. இவற்றிற்குகூட சில எண்ணிக்கையுள்ளது. வசதிகளுக்கேற்றபடி ....1,9,11,27,58,108,116,554, 1000 என வரிசைப்படுத்தி ஏற்றப்படுகிறது.

ஏன் இந்த தீபங்கள் ஏற்றப்படுகிறது. இறைவன் சோதி வடிவானவன், "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதியாம்!" அவன் நம்மில் உள்ள அறியாமை மிகுதியினால் உள்ள செருக்கினை அறுக்கும் விமலன் அவன் ஆகையால் விளக்குகள் ஏற்றி நம்மில் உள்ள மலங்களை அகற்றுமாறு வேண்டுவதுதான்.

வில்வ இலையினால் அவனை தொழுவது முப்பிறவியில் அதாவது, சஞ்சிதம், வர்தமானம், பிராரப்தம் என்ற மூவ்விதமான கருமங்களை அகற்றுவான். ஆகையால் வில்வ இலை ஈசனுக்கு மிகவும் பிடித்தமான பூஜைப்பொருளாகும்.

"திரிதலம் திரிகுணாகாரம்
திரிநேத்திரஞ்ச திரியாயுதம்
திரிஜன்ம பாப சம்ஹாரம்
ஏகபில்வம் சிவார்பணம்"

என்று தொழுகின்றோம்.

சிவராத்திரியன்று கண்விழித்தலினால்

"சன்மகோடி சஹஸ்ரைந்து
யத்பலம் பூர்வ சஞ்சிதம்
தத்பலம் தஸ்யதே தேசி
சிவராத்திரி விரஜாகராத்"

ஆயிரம் கோடி சன்மங்களில் செய்துகொண்ட. புண்ணியம் நமக்கு கிடைக்க பெருகின்றன.

சிவராத்திரி மகிமையை கூறும் கதைகள் பல உள்ளன. வேடுவன் கண்ணப்பனுக்கு அருள் புரிந்தது சிவராத்திரியன்றே. மற்றும் ஒரு கதை எடுத்துக்காட்டுக்காக இங்கு கூறுகிறேன்.

ஓர் வேடுவன் சிவராத்திரியன்று வேட்டைக்குச் சென்று எதுவும் கிடைக்காமல் காடு முழுவதும் அலைந்து திரிந்து பசியால்வாடி அந்திப்பொழுதில் ஓர் ஓடையில் தாகம் தவிர்த்துக் கொள்ள சென்றபோது ஓர் மானைக் கண்டான். அதைப் பார்த்தவுடன் அவன் ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. ஆகையால் பக்கத்தில் உள்ள மரத்தில் ஏறிக்கொண்டு அதில் உள்ள தழைகளை கீழே போட்டு அந்த மானை வலையில் வீழச் செய்ய முயன்றான். மரக்கிளையில் ஏறிக்கொண்டிருக்கின்ற போது சுரை குடுவையில் உள்ள சிறிது நீர் கீழே கொட்டிவிட்டது. ஆனால் மான் மட்டும் சிக்காமல் தப்பித்துக்கொண்டே வந்தது. மான் வரும் என்று எண்ணி அவன் இலைகளை பறித்து கீழே போட்டுக் கொண்டிருக்க பொழுது விடிந்தது. அவனுக்கு சிவானுகிரகம் கிடைத்தது.

காரணம் அது சிவராத்திரி இரவு, தான் பட்டினி கிடந்தது நோன்பாகவும், தான் அமர்ந்த மரம் அது வில்வம் அதன் அடியில் சிவலிங்கம் என்றும், தான் பறித்து எறிந்த இலைகள் சிவலிங்கத்தின் மேல் விழுந்ததும் அவனுக்குத்தெரியாது. சுரைக் குடுவையில் உள்ள நீர் சிவலிங்கத்தின் மீது கொட்டிவிட்டதால் அது அபிஷேகமாகியது என்பது அவனுக்கு தெரியாது. ஆயினும் இறைவன் அவனுக்கு அருள் செய்தான் என்பது மட்டும் உறுதி.

சம்சார சாகரத்தை கடக்கச் செய்யும் படகு, மோக்ஷத்திற்கு வழிகாட்டி, போக பாக்யங்களுக்கு மையம், அனைத்து வேத சாரங்களுடன் கூடிய மரத்தில் உள்ள சக்தி பாவங்களை சாம்பலாக்கக்கூடிய சுடர் ஒளி, நற்பண்புகள் என்னும் மலரை தரும் மலர்க் கொடி என்றும், சிவபக்தியில் உள்ள சக்தியை வருணித்துள்ளனர் பெரியோர்கள்.

சிவதத்துவ சாரம் ஆகிய பதி, பசு, பாசம், அதாவது இறை, உயிர், தளை இம்மூன்றும் அனாதியானது. இவற்றிற்கு ஆதிஅந்தம் கிடையாது. ஆனால் நாம் இறைவனை வழிபடும் போது மற்ற இரண்டும் நம்மில் அணுகாது என்றார் திருமூலர்.

"பதி பசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற் பசுபாசம் அனாதி
பதியினைச் சென்றணுகாப்பசுபாசம்
பதியணுகிற்பசுபாசம் நிலாவே"

ஆகையால் நாமும் நாடும் வீடும் நலம்பெற இவ்வுலகம் நற்பாதையில் உய்ய இறைவனை

நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க
இமைப் பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குரு மணிதன் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க.

என அவன் தாள் பணிந்து வணங்குவோமாக.



(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமாநுஜர்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

## உலகீர் வாரீர்! உறுதி சொல்கிறேன்!

திருவரங்கத்திலிருந்து கொண்டு திருவரங்கத் திருக்கோயில் திருப்பணிகளைத் திருத்தமுறச் செய்வதில் உடையவர் ஆர்வம் காட்டி வந்தார். பெரியநம்பிகளிடம் த்வயத்திற்குப் பொருள் கேட்டு மகிழ்ந்து வந்தார். கீதார்த்த சங்கிரகம், ஸித்தித் திரயம், வியாஸ சூத்திரம், பஞ்சராத்ராகமம் முதலான நூல்களை விளக்கமுறக்கேட்டறிந்தார். இவ்வாறு, பெரிய நம்பிகள் உடையவருக்கு மறைபொருள்களையெல்லாம் விளக்கமுற எடுத்துக் கூறிவந்தார்.

ஒருநாள், பெரியநம்பிகள் இராமாநுசரிடம் திருக்கோட்டியூர் நம்பிகளைப் பற்றிப் பேசத் தொடங்கினார்.

"இராமாநுசரே! இங்கிருந்தும் சிறிது தூரத்தே திருக்கோட்டியூர் என்றொரு தலம் உள்ளது. அங்கே, பெரும் புலமை வாய்ந்தவரும், ஆளவந்தாரின் நிறைந்த அன்புக்குரியவருமாகிய திருக்கோட்டியூர் நம்பிகள் என்னும் ஸ்ரீவைணவர் ஒருவர் வாழ்ந்து வருகிறார். அவரைப் போன்று பெரும்புலமைமிக்கவர் இப்பகுதியில் எவரும் இலர்! மேலும், இரகசியமான உபதேசங்கள் சிலவற்றைத் திருக்கோட்டியூர் நம்பிக்கு மட்டுமே ஆளவந்தார் அருளிச்செய்துள்ளார். எனவே, திருக்கோட்டியூர் சென்று நம்பியிடம் பொதிந்து கிடக்கும் உபதேசச் செல்வங்களைப் பெற்று வருக!" என்று பரிவுடன் கூறினார்.

இதுகேட்டு, உடையவர் பெரியநம்பிகளிடம் விடைபெற்றுக்



கொண்டு திருக்கோட்டியூருக்குப் பயணமானார். நம்பிகளின் திருமாளிகை இருக்குமிடத்தைக் கேட்டறிந்தவாறே கூப்பிய கைகளுடன் நடந்து சென்று நம்பிகளைக் கண்டு அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

தாம் வந்த காரியத்தை உடையவர் பணிவுடன் எடுத்துக் கூறினார். ஆனால், திருக்கோட்டியூர் நம்பியோ அலட்சியமாக நாளைவா!" என்று பலமுறையும் திருப்பித் திருப்பி அனுப்பினார். இவ்வாறு பதினெட்டு முறைகள் சென்றும் உடையவருக்குத் திருக்கோட்டியூர் நம்பி எவ்வித உபதேசமும் செய்யவில்லை.

எனவே திருவரங்கத் திருப்பணியில் உடையவர் தம் கவனம் முழுவதையும் செலுத்தலானார். கோயிலைச் செப்பனிடும் பணியைச் சிறப்பாகச் செய்து முடித்தார். தளிகைகளைத் தயாரித்து விநியோகிப்பதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்தார். மண்டபங்கள், நந்தவனங்கள், மலர்ச்சோலைகள், மருத்துவச் சாலைகள், நூல் நிலையங்கள் முதலானவற்றை ஏற்படுத்தி அவை சீராக நடைபெறவும் வழிவகை செய்தார். சோழச் சிற்றரசன் அகளங்கன் என்பான் உடையவருக்குப் பெரிதும் துணையாக நின்றார். பல திருப்பணிகளைப் பல துறையிலும் சிறப்பாக முடித்துக் கொடுத்துக் கோவில் நிர்வாகத்தை நன்கு பராமரித்து வரும் பொறுப்பை அகளங்கனிடமே விட்டுவிட்டார்.

பதினெட்டு முறை திருப்பி அனுப்பிய திருக்கோட்டியூர் நம்பி உடையவரின் பெரும்புலமை, பக்திச் சிறப்பு, திருப்பணி ஈடுபாடு முதலானவை பற்றிப் பலரிடமும் பலமுறையும் கேட்டறியும் வாய்ப்பு கிட்டியது. எனவே, சீடன் ஒருவனை அனுப்பி உடையவரைத் தண்டும் பவித்ரமுகமாகத் தாம் ஒருவர் மட்டுமே வருமாறு சொல்லியனுப்பினார்.

அழைப்புக்குகந்த உடையவர் கூரத்தாழ்வாரையும் முதலியாண்டானையும் கூட்டிக் கொண்டு விரைந்து சென்று திருக்கோட்டியூர் நம்பிகளின்

திருவடிகளில் வீழ்ந்து வணங்கி நின்றார்.

"தனித்துத்தானே வரச்சொன்னோம். இவர்களிருவரைக் கூட்டி வந்ததேன்?" என்று நம்பிகள் உடையவரை வினவினார்.

"தங்கள் ஆணைப்படியே தான் வந்துள்ளேன். தண்டும் பவித்ரமுமாகவன்றோ வரச் சொல்லியது தேவரீர் ஆணை! என்று விடைகூறி ஆண்டானைத் தண்டாகவும், ஆழ்வாரைப் பவித்ரமுமாகக் காட்டி நின்றார் உடையவர்!

உடையவரின் சாதுர்யத்தைக் கண்டு வியந்த நம்பிகள் "அப்படியாயின் நான் கூறப்போகும் ரஹஸ்யார்த்தங்கள் உங்கள் மூவரிடம் மட்டுமே இருக்க வேண்டும். வேறு எவருக்கும் உபதேசிக்கலாகாது!" என்று நிபந்தனையிட்ட பின்னர், சரமஸ்லோகத்தின் உட்பொருளையெல்லாம் விளக்கமாகக் கூறி உபதேசித்தருளினார்.

"நான் உமக்கு உபதேசித்த மந்திரம் வைகுந்த பதவியை அளிக்கவல்லது. நீர் யோக்யர் என்பதாலேயே யாருக்கும் எட்டாத இம்மறை பொருளை உமக்கு உபதேசித்தேன். எனவே, இம்மந்திரத்தை வேறெவர்க்கும் உரைக்க வேண்டா!" என்று திருக்கோட்டியூர் நம்பிகள் உடையவர்க்கு விடை கொடுத்தனுப்பினார்.

மந்திரத்தின் உட்பொருள் அறியப்பெற்ற உடையவரின் திருமுகம் ஞானத்தால் பல மடங்கு ஒளிவீசியது. நம்பிகளின் திருவடிகளைச் சிந்தித்த திருவரங்கம் நோக்கிப் புறப்படலானார். ஆனால், அவரது கால்கள் திருக்கோட்டியூரிலிருக்கும் திருமாலின் கோவிலை நோக்கிச் செல்லலாயின.

உபதேசம் பெற்ற மறுநாளே ஊரிலுள்ளாரையெல்லாம் கோவிலுக்கு வருமாறு அழைத்தார். எல்லாரும் கோவிலுக்கு வாருங்கள்! விலையுயர்ந்த ரத்தினம் ஒன்றைத் தருகிறேன்! என்று கூவிக் கொண்டே சென்றார்.

இளைஞரும் முதியவரும் என்று பலதிறத்தாரும் உடையவரைப் பின்பற்றிச் சென்றனர். மகான் ஒருவர் இவ்வாறு கூவியழைக்கிறார் என்பதைக் கேட்டோர் அனைவரும் தம் தம் வேலைகளை அப்படி அப்படியே விட்டு விட்டுத் திருக்கோட்டியூர் திருக்கோயில் முன் திரண்டனர்.

பக்தர்கள் வெள்ளம் கரை புரண்டோடியது. கூரத்தாழ்வாரும் முதலியாண்டாரும் தம்மையே மறந்தனர். கோபுரத்தின் முன்பு கூடியிருந்த மக்கள் வெள்ளத்தைக கண்டதும் உடையவரின் உள்ளத்தில் அன்பு வெள்ளம் பெருக்கெடுத்தோடியது.

உடையவர், திருக்கோயில் திருக்கோபுரத்தின் மேல் ஏறிக் கொண்டார். கூடியிருந்தவர்களைப் பார்த்து மதுரமான குரலில் கூவலானார்.

"மெய்யன்புடையோரே! நீங்கள் உங்கள் பிறவிக்கடலைத் தாண்டுவதற்குரிய மகாமந்திரத்தைக் கூறப்போகிறேன். நீங்கள் அதனை மும்முறை பக்தியுடன் சாற்றுங்கள். உங்களுக்கு முக்தி கிடைப்பது உறுதி.

இவ்வாறு கூறியவாறே உடையவர் நலம் தரும் சொல்லாகிய நாராயணமந்திரத்தை அனைவர்க்கும் கேடகுமாறு உரக்கக் கூவினார். கூடியிருந்த மக்கள் தம்மை முற்றும் மறந்தவராய், திருமந்திரமாகிய அஷ்டாக்ஷர மந்திரத்தை மும்முறை ஒரே குரலில் உச்சரித்தனர். வானுலக இன்பம் பெற்றவர்கள் போன்று அனைவரும் அகமும் முகமும் பொலிவு பெறத் தேவர்களே போன்று துலங்கினர்.

நம்மை உய்விக்க வந்த மகான் என்றே உடையவரைக் கருதிய கூட்டத்தினர் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினர். பெறற்கரிய பேறு பெற்றவர்களாகத் தங்கள் உள்ளம் நிறைந்தவராய் இல்லம் நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தனர்.

நன்றி தெரிவித்து வந்தனை செய்யும் சிந்தனையோடு உடையவர் திருக்கோட்டியூர் நம்பிகளின் திருமாளிகை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். இதற்குள் உடையவரின் உபதேசம் பற்றிய செய்தி திருக்கோட்டியூர் நம்பிகளின் திருச்செவிக்கு எட்டியது. நம்பிகளைக் கண்டு பணிவுடன் வீழ்ந்து வணங்கினார் உடையவர்!

உடையவரைக் கண்டதும் நம்பிக்குச் சீற்றம் பொங்கியது.

"உம் முகத்தில் விழிக்கவும் நான் விரும்பவில்லை! குருவின் ஆணையை மீறிய உமக்கு மந்திரமணியை அளித்துப் பாவத்தைத் தேடிக்கொண்டேனே! உம் போன்ற குருத் துரோகிகளுக்கு நரகிலும் இடம் கிட்டாது!"

நம்பிகளின் சீற்றம் மிக்க சொற்களைக் கேட்டு உடையவர் பதற்றமோ மனமாற்றமோ அடையவில்லை. சாந்தமாகப் பதிலளிக்கத் தொடங்கினார்.

"குருதேவரே! தேவரீர் எனக்கருளிய மந்திரோபதேசம் என்னை முக்திக்கு ஆளாக்கும் என்று தேவரீர் கூறியருளினீர்! வேறொருவருக்கும் உபதசிக்கலாகாது என்றும் ஆணையிட்டீர்! குருவாணையை மீறிய எனக்கு நரகமே கிட்டும் என்பதை நான் அறிந்தே இவ்வாறு செய்தேன்! ஆயிரக்கணக்கானவர் தேவரீர் எனக்கு உபதேசித்த திருமந்திரத்தால் முக்திக்குரியவரானார்கள்! ஆயிரக்கணக்கானோர் பிறவிப்பயன் பெற்று அடியேன் ஒருவன் மட்டும் அருநரகு அடைவதாயின் அது எனக்கு உகப்புடையதே! தேவரீர் உபதேசத்தால் ஆயிரக்கணக்கானோரை முக்திக்குரியவராக்கியதைவிட நான் பெரும் பேறு வேறொன்று உண்டோ?"

"யதிஷ்யே ஏக ஏவாஹம் நரகே
குருபாதகாத்
ஸர்வே கச்சந்து பவதாம் க்ருபயா
பரமம்பதம்"

என்னும் ஸ்லோகத்தை உடையவர் விளம்பியருளினார்.

உடையவரின் விடையைக் கேட்ட நம்பிகளின் சீற்றம் தணிந்தது; உள்ளத்தில் பெரியதொரு மாற்றம் நிகழ்ந்தது. தமது குறுகிய மனப்பான்மையையும், தம் சீடரான உடையவரின் உயர்வான உதார குணத்தையும் நினைந்து நினைந்து நெஞ்சம் நெக்குருகினார்; ஆனந்த மேலீட்டால் உடையவரைக் கட்டித் தழுவிப் பேரின்பம் அடைந்தார்.

இந்நிகழ்ச்சியைக் கண்டோர் அனைவரும் மெய் சிலிர்த்து நின்றனர். பரமகருணாமூர்த்தியாக விளங்கும் ஒருவரே நமக்கெல்லாம் தலைவராக விளங்கத் தக்கவர் என்று உணர்ந்த நம்பிகள் உடையவருக்கு "எம்பெருமானார்" என்னும் விருதளித்து மகிழ்ந்தார். நமக்குக் கிடைக்காதபேறு உடையவருக்குக் கிடைத்ததை எண்ணி உவந்து தம் குமாரரான சௌம்ய நாராயணனை உடையவரின் சீடராக்கி விடைகொடுத்தனுப்பினார் நம்பிகள்!

## கற்றலும் கற்பித்தலும்

'எம்பெருமானார்' என்னும் விருது அளித்து மகிழ்ந்த திருக்கோட்டியூர் நம்பிகள் உடையவருக்குத் திருமந்திரார்த்த ரஹஸ்யம் கூறி விளக்கினார் என்பதை முன்பு அறிந்தோம். மற்றுமொருமுறை எம்பெருமானார்க்குத் திருக்கோட்டியூர் நம்பிகள் சரமஸ்லோகத்தின் உட்பொருளை எம்பெருமானார் கேளாமல் நம்பிகளே விரும்பி உபதேசித்ததாக வரலாறு கூறுகிறது.

சரம ஸ்லோகம் என்பது ஸ்ரீமத் பகவத் கீதையின் பதினெட்டாவது அத்தியாயம் அறுபத்தாறுவது ஸ்லோகமாகும்.

ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ !
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச:

என்பதாகும்.

இந்த ஸ்லோகத்தின் மறைபொருளைக் கேட்பதற்கு எம்பெருமானாரை மட்டுமே நம்பிகள் வரச்சொல்லியிருந்தார். எம்பெருமானாரும் தனித்தே வந்து நம்பிகளின் திருவடிகளில் தண்டன் சமரப்பித்தார். நம்பிகள் இவரைத் தனியே அழைத்துச் சென்று சரமஸ்லோகப்பொருளைத் தெளிவாகக் கூறினார். வேறெவருக்கும் இதை உபதேசிக்கக்கூடாது என்று வலியுறுத்தினார்.

இதுகேட்டு எம்பெருமானார், "வெறொருவர்க்கும் சொல்லமாட்டேன். ஆனால் கூரத்தாழ்வார் ஒருவர்க்கு மட்டும் சொல்ல அனுமதிக்கவேண்டும்" என்று அனுமதி கேட்டார்.

"ஓராண்டுக்காலம் பணிவிடையேற்ற பின்னரே உபதேசிக்கலாம்" என்று நம்பிகள் எம்பெருமானார்க்கு விடைகொடுத்தனுப்பினார்.

திருவரங்கம் வந்து சேர்ந்த எம்பெருமானார் திருவடிகளில் கூரத்தாழ்வார் வீழ்ந்து வணங்கினார். தாம் நம்பிகளிடம் பெற்ற உபதேசம் குறித்தும் இம்மறைபொருளைக் கூரத்தாழ்வாருக்கு மட்டும் ஓராண்டுக்காலப் பணிவிடையேற்றபின் உபதேசிக்கலாம் என்று பெற்றுவந்த அனுமதி குறித்தும் எம்பெருமானார் ஆழ்வானிடம் எடுத்துக் கூறினார்.

"ஓராண்டுக்காலம் உயிருடன் இருப்போம் என்பது நிச்சயமல்லவே! நேற்றிருந்தார் இன்று இல்லை என்பதன்றோ இவ்வுலக இயல்பாக இருக்கிறது. எனவே, எப்படியேனும் சரம ஸ்லோகத்தின் ரஹஸ்யார்த்தத்தைக் கேட்டே தீருவேன்!" என்று கூரத்தாழ்வார் தம்முள் உறுதி செய்து கொண்டார்.

ஒருமாதம் உண்ணாவிரதம் இருப்பது ஓராண்டு பணிவிடை செய்வதற்குச் சமம் என்று சாத்திரங்கள் கூறுவதை நினைவு கூர்ந்தார். அவ்வாறே ஒருமாதம் எம்பருமானார் திருமாளிகை முன்பு பட்டினி கிடந்தார். அதன்பின் அவ்வர்த்த

விசேஷத்தை எம்பெருமானார் திருவாக்கால் அருளப்பெற்றார்.

கூரத்தாழ்வார் சரமஸ்லோகப்பொருளைக் கேட்டறிந்தார் என்பதனை முதலியாண்டான் அறிந்து எம்பெருமானாரைப் பணிந்தெழுந்தார். ஆழ்வான் ஒருவனுக்கு மட்டுமே உபதேசிக்கும் அனுமதி பெற்றுவந்ததை எடுத்துக்கூறி திருக்கோட்டியூர் நம்பிகளைச் சார்ந்து உபதேசம் பெறுமாறு முதலியாண்டானை எம்பெருமானார் அனுப்பிவைத்தார்.

ஆறுமாதம் காத்திருந்தும் ஆண்டானுக்கு நம்பிகள் ஏதும் பதில் கூறவில்லை. ஒருநாள் தம் மனவிருப்பத்தைப் பேராதாரத்தோடு நம்பியிடம் எடுத்துக்கூறினார். முதலியாண்டானது மனப்பக்குவத்தை அறிந்த திருக்கோட்டியூர் நம்பிகள் பின் வருமாறு கூறலானார்.

"ஆண்டானே! தனமதம், கல்வி மதம், குலமதம் ஆகியவற்றால் நீர் செருக்குற்றிருப்பதை அறிந்தே எம்பெருமானார் உம்மை எம்மிடம் அனுப்பிவைத்தார். இந்த மூன்று மதங்களும் நீங்கப்பெற்றவரே சாதுவாதல் கூடும். தற்போது நீர் மனச்சாந்தி பெற்று மாண்புடன் விளங்குகிறீர்! எனவே, உம் குருவிடமே சென்றால் உபதேசம் பெறலாம்!" என்று முதலியாண்டானுக்குத் திருக்கோட்டியூர் நம்பிகள் விடைகொடுத்தனுப்பினார்.

முதலியாண்டான் திருவரங்கம் சென்று திருக்கோட்டியூரில் நடந்தவற்றையெல்லாம் விளக்கமுறக்கூறிப் பணிந்து நின்றார். அதேசமயம் பெரிய நம்பிகளின் திருமகனார் அத்துழாய் (அதுலை) என்பவர் வந்து எம்பெருமானார் திருவடிகளை வணங்கிக் கூறலுற்றார்.

(தொடரும்)

## ஜோதிஷத்தில் சூரிய பகவான்

சூரியன் சிம்மராசிக்கு அதிபதி. சத்துவகுணமுடையவர். வர்ணம் தாமிரம், கிழக்கு முகமாக இருப்பவர். பிடித்த வர்ணம் சிகப்பு. அவருடைய மணி சூரியகாந்தம். சுக்கிரன், ராகு, கேதுவுக்கு சத்துரு.

சித்திரை மாதம் மேஷ ராசியில் அவர் இருக்கும்போது மனிதர்களின் சம்பாத்யம் குறையும். ரிஷப ராசியில் சஞ்சரித்தால் ஸ்த்ரீமூலம் தனவரவு.

ஆனி மாதம் மிதுன ராசியில் சஞ்சரித்தால் கல்வி, பொருள் விருத்தியடையும்.

ஆடி கடக ராசியில் சஞ்சரிப்பதால் சோம்பல் உண்டாகும்.

ஆவணி மாதம் சிம்ம ராசியில் சஞ்சரிக்கும்போது நட்பு, சுகம் உண்டாகும். கண் நோய்க்கு இடமுண்டு.

புரட்டாசி மாதம் கன்னி ராசியில் உள்ளபோது செல்வம், தெய்வபக்தி அதிகரிக்கும்.

ஐப்பசி துலா ராசியில் சஞ்சரித்தால் புத்தி கூர்மை தத்துவ ஆராய்ச்சியில் நாட்டம், சாதுவாக இருப்பவர்களுக்கு பிரியம உண்டாகும்.

கார்த்திகை விருச்சிக ராசியில் சஞ்சரிக்கும்போது வித்தை அபிவிருத்தி, சாந்தமான சுபாவம், பிறரால் கௌரவம் உண்டாவது எல்லாம் ஏற்படும்.

மார்கழி தனுர் ராசியில் வியாபார வருமானம் அதிகம். பெண்களிடம் மோகம் உண்டாக வாய்ப்பு.

தை மாதம் மகர ராசியில் உள்ளபோது பொருள் சம்பாதிக்க புத்தி சாதுர்யம் உண்டாகும்.

மாசி மாதம் கும்பராசியில் சஞ்சரிக்கும் போது புத்திர பாக்கியம் இல்லாமை பெற்றோரிடம் அன்பு குறைதல், ஆகாரக்குறைவு முதலியன வரும்.

பங்குனி மாதம் மீன ராசியில் சூரியன் சஞ்சரிக்கும்போது புகழ், தனவிருத்தி முதலியன கிட்டும்.

திருமதி. பிரேமா ராவ் - பெங்களூர்.

# இரயில் போக்குவரத்து கால அட்டவணை - திருப்பதி.

புனித பூமியான திருமலைக்கு அண்டை மாநிலங்களிலிருந்து வருகை புரிய இரயில் போக்குவரத்து வசதிகள் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளன. அவ்வாறு வருபவர்களுக்கென இர-யிலுடன் சாலை மற்றும் சாலையுடன் இரயில் (RCRT) பயணச் சீட்டுகளும் பயணிகளுக்கு அளிக்கப்படுகின்றது.

## இரயில்கள் சேரும், புறப்படும் காலவிவரங்கள் - திருப்பதி.

### குறுகிய இருப்புப்பாதை இரயில் சேரும் காலம்

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் |
|---|---|---|---|
| 646 | பாண்டிச்சேரி பயணியர் | பாண்டிச்சேரி - திருப்பதி | 03.00 |
| 288 | பெல்லாரி பயணியர் | பெல்லாரி - திருப்பதி | 04.50 |
| 6800 | மீனாட்சி விரைவு | மதுரை - திருப்பதி | 05.30 |
| 188 | காட்பாடி பயணியர் | காட்பாடி - திருப்பதி | 08.55 |
| 7597 | வெங்கடாத்ரி விரைவு | குண்ட்டக்கல் - திருப்பதி | 12.30 |
| 158 | காட்பாடி பயணியர் | காட்பாடி - திருப்பதி | 11.40 |
| 642 | விழுப்புரம் பயணியர் | விழுப்புரம் - திருப்பதி | 15.15 |
| 248 | குண்டக்கல் பயணியர் | குண்ட்டக்கல் - திருப்பதி | 18.30 |
| 192 | காட்பாடி பயணியர் | காட்பாடி - திருப்பதி | 20.10 |

### குறுகிய இருப்புப்பாதை இரயில் புறப்படும் காலம்

| | | | |
|---|---|---|---|
| 643 | விழுப்புரம் பயணியர் | திருப்பதி - விழுப்புரம் | 03.30 |
| 247 | குண்ட்டகல் பயணியர் | திருப்பதி - குண்ட்டகல் | 06.00 |
| 191 | காட்பாடி பயணியர் | திருப்பதி - காட்பாடி | 07.00 |
| 157 | காட்பாடி பயணியர் | திருப்பதி - காட்பாடி | 10.30 |
| 7598 | வெங்கடாத்ரி விரைவு | திருப்பதி - குண்ட்டகல் | 13.30 |
| 6799 | மீனாட்சி விரைவு | திருப்பதி - மதுரை | 15.40 |
| 187 | காட்பாடி பயணியர் | திருப்பதி - காட்பாடி | 17.30 |
| 287 | பெல்லாரி பயணியர் | திருப்பதி - பெல்லாரி | 21.45 |
| 641 | பாண்டிச்சேரி பயணியர் | திருப்பதி - பாண்டிச்சேரி | 23.45 |

### அகல இருப்புப்பாதை இரயில் சேரும் காலம்

| | | | |
|---|---|---|---|
| 474 | காகிநாடா பயணியர் | காகிநாடா - திருப்பதி | 03.30 |
| 213 | மைசூர் பயணியர் | மைசூர் - திருப்பதி | 04.00 |
| 7488 | திருமலை விரைவு | விசாகப்பட்டினம் - திருப்பதி | 06.20 |
| 7424 | நாராயணாத்ரி விரைவு | செகந்திராபாத் - திருப்பதி | 07.35 |
| 8439 | பூரி விரைவு (சனிக்கிழமைமட்டும்) | பூரி - திருப்பதி | 08.30 |
| 6057 | சப்தகிரி விரைவு | சென்னை - திருப்பதி | 09.20 |
| 7429 | ராயலசீமா விரைவு | ஹைதராபாத் - திருப்பதி | 09.40 |
| 440 | ஓங்கோல் பயணியர் | ஓங்கோல் - திருப்பதி | 12.00 |
| 7493 | பாலாஜி விரைவு(ஞாயிறு/புதன்) | மும்பை - திருப்பதி | 12.40 |
| 7489 | கொச்சின்-வாரனாசி (ஞாயிறு) | கொச்சின் - வாரனாசி | 13.45 |
| 8079 | ஔரா விரைவு | ஔரா - திருப்பதி | 15.15 |
| 6053 | திருப்பதி விரைவு | சென்னை - திருப்பதி | 16.50 |
| 207 | உள்நகரப் பயணியர் | தாடிபத்ரி - திருப்பதி | 20.15 |
| 530 | கூடூர் பயணியர் | கூடூர் - திருப்பதி | 20.35 |
| 7406 | கிருஷ்ணா விரைவு | செகந்திராபாத் - திருப்பதி | 21.30 |
| 195 | அரக்கோணம் பயணியர் | அரக்கோணம் - திருப்பதி | 23.15 |
| 6403 | கருடாத்ரி விரைவு | சென்னை - திருப்பதி | 19.50 |

## அகல இருப்புப்பாதை இரயில் புறப்படும் காலம்

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் |
|---|---|---|---|
| 196 | அரக்கோணம் பயணியர் | திருப்பதி - அரக்கோணம் | 04.05 |
| 7405 | கிருஷ்ணா விரைவு | திருப்பதி - செகந்திராபாத் | 05.30 |
| 208 | உள்நகரப் பயணியர் | திருப்பதி - தாடிபத்ரி | 06.30 |
| 529 | கூடூர் பயணியர் | திருப்பதி - கூடூர் | 06.55 |
| 8080 | ஔரா விரைவு | திருப்பதி - ஔரா | 09.45 |
| 6054 | திருப்பதி விரைவு | திருப்பதி - சென்னை | 10.05 |
| 7490 | வாரணாசி-கொச்சின் விரைவு (வெள்ளி) | வாரணாசி-கொச்சின் | 13.45 |
| 439 | ஓங்கோல் பயணியர் | திருப்பதி-ஓங்கோல் | 14.15 |
| 7430 | ராயலசீமா விரைவு | திருப்பதி-ஹைதராபாத் | 15.30 |
| 8440 | பூரி விரைவு (சனி) | திருப்பதி-பூரி | 15.50 |
| 6058 | சப்தகிரி விரைவு | திருப்பதி-சென்னை | 17.30 |
| 7423 | நாராயணாத்ரி விரைவு | திருப்பதி-செகந்திராபாத் | 18.30 |
| 7487 | திருமலை விரைவு | திருப்பதி-விசாகப்பட்டிணம் | 19.00 |
| 7494 | பாலாஜி விரைவு (வியாழன்/ஞாயிறு) | திருப்பதி-மும்பை | 21.40 |
| 214 | மைசூர் பயணியர் | திருப்பதி-மைசூர் | 22.00 |
| 473 | காகிநாடா பயணியர் | திருப்பதி-காகிநாடா | 23.30 |
| 6404 | கருடாத்ரி விரைவு | திருப்பதி-சென்னை | 06.30 |

## இரயில்கள் சேரும், புறப்படும் காலவிவரங்கள்-ரேணிகுண்ட்டா

| இரயில் எண். | இரயிலின் பெயர் | இருந்து - வரை | சேரும் காலம் | புறப்படும் காலம் |
|---|---|---|---|---|
| 7029 | கொச்சின்-ஹைதராபாத் விரைவு (செவ்வாய், வெள்ளி, சனி) | கொச்சின்-ஹைதராபாத் | 00.20 | 00.35 |
| 2625 | கேரளா விரைவு | திருவனந்தபுரம்-புதுதில்லி மையம் | 04.15 | 04.25 |
| 2617 | மங்கலா விரைவு | மங்களூர்-நிஜாமுத்தீன் | 05.15 | 05.30 |
| 6687 | நவயுகா விரைவு (செவ்வாய்) | மங்களூர்-ஜம்முதாவி | 09.35 | 09.45 |
| 6017 | ஹிமாசாகர் விரைவு (சனி) | திருவனந்தபுரம்-ஜம்முதாவி | 09.35 | 09.45 |
| 6009 | மும்பை விரைவு | மும்பை-சென்னை | 02.30 | 03.00 |
| 6063 | சென்னை விரைவு | தாதர்-சென்னை | 17.20 | 17.35 |
| 6511 | தாதர் விரைவு | தாதர்-சென்னை | 13.45 | 14.00 |
| 6010 | மும்பை விரைவு | சென்னை-மும்பை | 01.10 | 01.30 |
| 6009 | மும்பை விரைவு | மும்பை-சென்னை | 02.30 | 03.00 |
| 1082 | (ஜெயந்தி)மும்பை விரைவு | கன்யாகுமரி-மும்பை | 03.55 | 04.05 |
| 6064 | சென்னை விரைவு | சென்னை-மும்பை | 09.20 | 09.35 |
| 6512 | தாதர் விரைவு | சென்னை-தாதர் | 14.30 | 14.45 |
| 6688 | நவயுகா விரைவு (ஞாயிறு) | ஜம்முதாவி - மங்களூர் | 03.40 | 03.50 |
| 2618 | மங்களா விரைவு | நிஜாமுத்தீன்-மங்களூர் | 20.40 | 20.50 |
| 6018 | ஹிமாசாகர் விரைவு (வியாழன்) | ஜம்முதாவி-திருவனந்தபுரம் | 03.40 | 03.50 |
| 1081 | (ஜயந்தி) கன்னியாகுமரி விரைவு | மும்பை-கன்னியாகுமரி | 16.25 | 16.40 |
| 2626 | கேரளா விரைவு | புதுதில்லி-திருவனந்தபுரம் | 21.55 | 22.05 |
| 7030 | ஹைதராபாத் கொச்சின் விரைவு (செவ்வாய், வெள்ளி, சனி) | ஹைதராபாத்-கொச்சின் | 00.30 | 00.45 |

திருப்பதி இரயில்நிலைய தகவல்தொடர்பு தொலைபேசி எண். 131

ரேணிகுண்ட்டா இரயில்நிலைய தகவல்தொடர்ப்பு தொலைபேசி எண். 75227

Published on behalf of T.T. Devasthanams by N.S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by M. Lakshman Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507.

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிற ருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக் கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற் கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப் பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

*கோயில் நிர்மாண விளக்கங்கள் :* ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள, முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

*சிற்ப அளவு முறைகள் :* ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

*சிற்பங்கள் :* விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையின ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

*ஆழ்வார்கள் :* தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

*வைதீகச் சடங்குகள் :* அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

*கலைகள் :* இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப் பட்டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

*அனுமதி நேரம்:* காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

*அனுமதிக் கட்டணம்:* பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

